Regd. No. M. 4392

# உங்களுடைய சாமான்களை வெளியூர்களுக்கு அனுப்ப



## இனி கவலை வேண்டியதில்லை

உங்கள் ஏற்றுமதி, இறக்குமதி எவ்வளவு இருந்தாலும் அவைகளை திருப்திகரமாயும், சிக்கனச் செலவிலும், உங்களுக்கு ஒருவித சிரமமில்லாமலும், குறித்த காலத்திலும், அநேகமாய் நேரே உங்கள் வீடோ அல்லது கிடங்குகளிலேயே கொண்டு போய்ச் சேர்க்கும்படியான வசதிகளை நாங்கள் செய்கிறோம்.

●

விபரங்களுக்கு எழுதவும்:

## ஸ்ரீ ராம விலாஸ் சர்வீஸ் லிமிடெட்

மவுண்ட் ரோடு (போன்: 8586) மதராஸ்

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press,
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras.



கும்பகோணம்

# டி. எஸ். ஆர்.

கம்பெனியின்

உயர்ந்த

- அத்தர்
- அரகஜா
- புனுகு
- ஜவ்வாது
- ஊதுவத்தி
- தசாங்கம்
- தைலங்கள்
- பன்னீர்
- பாக்குத்தூள்

முதலியன

•

விவரங்களுக்கு எழுதவும்

•

மதராஸ் விடி ஏஜெண்டுகள் :

மெஸர்ஸ். புஷ்பவனம் ஸ்டோர்ஸ்

பைக்ராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி

•

என். பி. ரத்னம் பிள்ளை, திருச்சி.





## ஆறு மாதத்திற்கு முந்தி இதே பையன்தான்

லிவர் பெருக்கமும் கோழை குன்மக்கட்டி நோயினாலும் இறந்து விடும் தருவாயில் அவஸ்த்தைப்பட்டுக் கொண்டிருந்த இக்குழந்தையை காப்பாற்றி புதிய உயிர் உண்டாக்கியது ஜம்மியின் லிவர்க்யூர். சென்ற 36 வருடங்களாகவே குழந்தைகளின் சகல குன்மக்கட்டி முதலிய நோய்களுக்கு இது கை கண்ட அமுத சஞ்சீவி.

## ஜம்மியின் லிவர் க்யூர்

எல்லா கடைகளிலும் விற்கப்படுகின்றன.

ஜம்மி வெங்கடரமணய்யா அண்ட் ஸன்ஸ்,
மைலாப்பூர் — மதராஸ்.

சப் ஏஜென்ட்ஸ்: கும்பகோணம். பிராஞ்சுகள்: கல்கத்தா, டில்லி, பம்பாய், பெங்களூர், திருச்சிராப்பள்ளி, விஜயவாடா.




தமிழ் நாடு ஏஜண்டுகள் :
ஸ்ரீ ராம ஜெனரல் ஸ்டோர்ஸ்
மேலக்கோபுர வீதி : மதுரை

# ஹோமியோபதி

வைத்தியத்தை ஆங்கிலத்திலோ, தமிழிலோ தங்கள் வீட்டிலிருந்தே படித்து டாக்டர் ஆகலாம். முழு விபரங்கள் அடங்கிய தமிழ் அல்லது ஆங்கிலப் பிரசுரத்துக்கு 4 அணா ஸ்டாம்பு அனுப்பவும்.



## இந்தியன் ஹோமியோபதி இன்ஸ்டிட்யூட்,

கும்பகோணம், தென் இந்தியா

பற்கள் ஆடுகின்றனவா ?
ஆனால் அவைகளுக்கு

# "தைமோஸின்"

சிகிச்சை அளியுங்கள்.

ப்ரோச் பல் வைத்தியர் Dr. C. M. தேசாய், L. D. S. அவர்களின் மருந்து முறைப்படி தயாரித்தது. டூத் பிரஷ் அல்லது விரலினால் சில துளிகள் உபயோகித்தால் போதும். மாயமாக பற்களின் காவியை அகற்றி, சொத்தை விழுவதைத் தடுத்து, பற்களை ஆரோக்யமாயும் வெண்மையாயும் செய்து, பயோரியா, ஈறு சம்பந்தமான வியாதிகள், வாய் வேக்காடு மற்றும், தொண்டை உபாதைகள் இவற்றைத் தடுக்கும்.

2 அவுன்ஸ் புட்டி விலை ரூ. 2.
தபால் பாகிங் சார்ஜ் தனி.

டெண்டல் இன்ஸ்டிட்யூட்
ஸேவா ஆஸ்ரமம், ப்ரோச்

ஏஜண்டுகள் :
T. M. தாகூர் & கோ.
1-10, ஸ்டிரிங்கர் தெரு, ஜீ.டி. மதராஸ்.




# எந்த நல்ல சந்தர்ப்பத்திற்கும்

சிநேகிதர்களின் கூட்டுறவு காலங்களில் டெனர் சிகரெட்டு உங்களெல்லாருக்கும் ஆனந்தத்தை அளிக்கும். டெனர் சிகரெட்டின் நறுமணத்தை சந்தோஷத்துடன் இக் காலங்களில் நீங்கள் அனுபவிப்பீர்கள். உங்களில் மெல்லிய தொண்டையுடையவர்கள் இதையே விரும்புவார்கள். உத்தரவாதமுள்ள 100% பொறுக்கின வர்ஜீனியா புகையிலைதான் டெனர்ஸ் செய்யப்படுகிறது. சுகம் நிறைந்த இந்த சிகரெட்டை நீங்கள் வாங்கி உங்கள் சிநேகிதர்களுடன் அனுபவித்துப் பாருங்கள்.

டி லக்ஸ் டெனர் சிகரெட்டு

ஜேம்ஸ் கார்ல்டன் லிட், லண்டன்

**Tenor**

**is truly a de Luxe Cigarette**

JAMES CARLTON LTD, LONDON. EASTERN LICENCEES, POST BOX No. 470, CALCUTTA



விருந்தினர்கள் எப்
பொழுதும் விரும்பும்
மிகச்சிறந்தவைநரஸூஸ்
டீயும் காபியும் தான் என்
பது வீட்டு எஜமானிக்கு
நன்ருகத் தெரியும்.
நரஸூஸ்
இந்தியத்தயாரிப்பில் தலைசிறந்தது
நரஸூஸ் மான்யுபாக்சரிங் கம்பெனி சேலம் தென்னிந்தியா.

இருக்கட்டும். என் கட்டுரைகளைப் பற்றிக் குறைவாகவா பேசிக் கொண்டிருக்கிறீர்? இருக்கட்டும். நான் சர்வாதிகாரி யாகட்டும். அப்பொழுது பார்த்துக் கொள்ளுகிறேன் உம்மை!)

நாடோடித் தற்காப்புச் சட்டத்துக்கு அடுத்தபடியாகத் தினம் ஒரு அவசரச் சட்டம் வைஸ்ராய் மாளிகையிலிருந்து பிறந்துகொண்டே யிருக்கும்.

பள்ளிக்கூடங்களில் எல்லாம் என் புஸ்தகங்களைக் கட்டாயப் பாடமாக வைக்கவேண்டும் என்று ஒரு அவசரச் சட்டம்! நான் எழுதியதை எல்லாரும் நெட்டுருப் பண்ணி ஒப்பிக்க வேண்டும் என்று ஒரு அவசரச் சட்டம்! தெருவில் போகும்போது எல்லார் கையிலும் என் புஸ்தகம் ஏதாவதொன்று விளங்க வேண்டும் என்று ஒரு அவசரச் சட்டம்! இரவில் எல்லாரும் என் புஸ்தகங்களைப் பாராயணம் பண்ணவேண்டும் என்று ஒரு அவசரச் சட்டம்!

இப்படியாகத் தானே அவசரச் சட்டங்கள் கணக்கு வழக்கின்றி அவசரம் அவசரமாக வெளிவந்து கொண்டிருக்கும். அவசரச் சட்டங்கள் போடுவதில் தங்களுக்கு ஈடு இணையில்லை என்று நினைத்துப் பெருமைப் பட்டுக் கொண்டிருக்கும் நம் பிரிட்டிஷ் சர்க்கார்கூட, இதைக் கண்டு வெட்கித் தலை குனிய வேண்டியதுதான்.

ஆனால் அவசரச் சட்டங்கள் இயற்றுவதில் என் மாமனார் கெட்டிக்காரர் தானோ என்று எனக்கு ஒரு சந்தேகம் இருக்கிறது. ஏனெனில் எங்கள் மாமனார் வீட்டில் அவசரச் சட்டங்கள் போடுவதெல்லாம் என் மாமனார் அல்ல. பின் யாராம்?...... வேண்டாம். அதை நான் சொல்லி என் காப்பி வாயில் மண்ணைப் போட்டுக் கொள்ள விரும்பவில்லை. மாமனார் வீட்டுக்குப் போகும்போதெல்லாம் எனக்கு மாமனாரா அடுப்பு மூட்டி, காப்பி போட்டுக் கொடுக்கிறார்?

இருந்தாலும் இதற்காக மாமனாரைக் கைவிட்டு விடலாமா? பிரிட்டிஷ் சர்க்கார் இருந்தால் அவசரச் சட்டங்கள் போடத் தெரியாதவரை வைஸ்ராய் மாளிகை இருக்கும் திக்கு நோக்கிப் பார்க்கக்கூட விடமாட்டார்கள்.

ஆனால் நான் இதற்காக என் மாமனாரைக் கை விட்டுவிடப் போவதில்லை. தற்சமயம் என் மாமனார் வீட்டில் அவசரச் சட்டங்கள் அவசரம் அவசரமாகப் போட்டுக் கொண்டிருக்கும் நபரையே அவசரச் சட்ட இலாகா மந்திரியாக ஆக்கிவிடப் போகிறேன். உத்தியோகத்துக்குச் சரியான நபராக்க, ஸ்திரீகளுக்கு என் அரசாங்கத்தில் பிரதிநிதித்வம் கொடுத்த மாதிரியுமாச்சு! சம உரிமைக் கட்சி பேசும் ஸ்திரீகளுக்கும் ஒரு நல்ல பதிலாச்சு!

நான் சர்வாதிகாரியானால் நிறைவேற்றுவதற்காக இதைப் போல இன்னும் எவ்வளவோ நல்ல யோசனைகள் வைத்திருக்கிறேன். ஆனால் எனக்குச் சர்வாதிகாரியாக வாய்த்திருக்கும் சரகவும், என் பெண் அனுவும் என்னை மேலே எழுத விட மாட்டார்கள் போல் தோன்றுகிறது. என் ஐந்து மாதப் பெண் அனு ஐந்து நிமிஷமாக 'ஹோ' என்று அலறிக் கொண்டிருக்கிறாள். "உங்களைத்தானே! குழந்தையைக் கொஞ்சம் தூக்கி வைத்துக் கொண்டால் என்ன?" என்று சரக கதறிக் கொண்டிருக்கிறாள். ஆகவே நான் செய்யப்போகும் இன்னும் ஒரே ஒரு காரியத்தை மட்டும் சொல்லி விட்டு நிறுத்திக் கொள்கிறேன்.

நியாயஸ்தலங்களில் சிறு குற்றங்களுக்கு அபராதம் விதிக்கும் வழக்கத்தை நிறுத்தி விடுவேன். அதற்குப் பதில் என் கட்டுரை ஏதாவதொன்றை எடுத்துக் கொடுத்து, அதை நூறுதடவை இம்போஸிஷன் எழுது, இருநூறு தடவை இம்போஸிஷன் எழுது என்று தண்டனை விதிக்கப்படும்.

ஆகவே, இப்பொழுதே சொல்லி விட்டேன்; ஜாக்கிரதை! என்னை சர்வாதிகாரி யாக்கி விடாதீர்கள்!



"என்னுங்க! நீங்க கொடுக்கிற ரேசன் விறகு பத்தமாட்டேங்குதே......"

கடைக்காரன்:— அதுக்கென்னுங்க! கொஞ்சம் மண்ணெண்ணெய் போட்டு நெருப்பு வை. பத்தாமே போயிடுமா...?

டுக்கு வைஸரா யாக நியமித்து விடுவேன்.

நான் சரசுவைக் கல்யாணம் பண்ணிக் கொள்வதற்கு முன்னரே, எனக்கு என் மாமனார் சிநேகமாகி விட்டார். நான் சரசுவை வரதட்சணை வாங்காமல் கல்யாணம் பண்ணிக்கொள்வதற்காகத் தானோ, அல்லது எனக்கு ஊக்க மூட்டுவதற்குத்தானோ எப்பொழுது பார்த்தாலும் என் கட்டுரைகளைப் புகழ்ந்து கொண்டிருப்பார்.


வெற்றிலை பாக்கு டப்பா விளங்கிக் கொண்டிருக்கும்.

சிலரைப் போல் படித்துப் பார்த்து விட்டுத்தான் அபிப்பிராயம் கூற வேண்டும் என்ற கட்டாயம்கூட அவர் வைத்துக் கொண்டதில்லை.

என்னைப் பார்க்கும் போதெல்லாம், "இந்த வாரம் உன் கட்டுரை பலே ஜோர்! அதைப் படித்துப் படித்து எங்கள் வீட்டில் எல்லார் வயிறும் புண்ணாகி விட்டது" என்பார்.

அவர் இப்படிச் சொல்லுவதைக் கேட்கும் போதெல்லாம் எனக்கு உண்டாகும் சந்தோஷம் சொல்லி முடியாது. அதிலும் சில வாரங்கள் மற்ற வாரங்களை விட சந்தோஷம் அதிகமாக இருக்கும்.

ஏனெனில் அந்த வாரங்களில் நான் கட்டுரையே எழுதியிருக்க மாட்டேன்! எழுதாத கட்டுரையையே இவ்வளவு அதிகமாகப் புகழுகிறவர் எழுதின கட்டுரையாய் இருந்தால் எவ்வளவு புகழ மாட்டார் என்று சந்தோஷப்படுவேன்.

ஆகவே நான் இந்தியாவுக்கு சர்வாதிகாரியானதும் முதல் முதல் காரியமாக என் மாமனாரை இந்தேசத்தின் வைஸராயாக ஆக்கி விடுவேன். [என்ன மாமனார் ஸ்வாமி! முடியாதா? ...


....கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளி...

அதெல்லாம் முடியாது. கட்டாயமாகத் தங்களை வைஸராயாக ஆக்கிவிட்டுத்தான் மறு வேலை.]

அடுத்தபடியாகக் கவர்னர்கள் பொறுக்க வேண்டுமல்லவா? அதற்காக வைஸராய் அகில இந்தியப் போட்டிப் பரீட்சை ஒன்று வைப்பார். என் எழுத்தின் அருமை பெருமைகளைப் பற்றி யார் அதிகமாகவும், அழகாகவும் வர்ணிக்கிறார்களோ, அவர்களுக்குக் கவர்னர் பதவி அளிக்கப்படும்.

இதே ரீதியில் மற்ற கலெக்டர் முதலிய வேலைகளும் கொடுக்கப்படும்.

சர்க்கார் சிப்பந்திகள் எல்லாம் தங்கள் வேலை உயர்வதற்காக முன் காலத்தைப் போல் வேலையைச் சிரத்தையாகச் செய்ய வேண்டும் என்கிற அவசியமில்லை. இல்லை, தற்காலத்தைப் போல் டின்னர் பார்ட்டிகள் கொடுக்க வேண்டும் என்கிற அவசியமும் இல்லை. எப்பொழுது பார்த்தாலும் என் எழுத்துக்களைப் புகழ்ந்து கொண்டிருந்தால் போதும். எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாகப் புகழுகிறார்களோ, அவ்வளவுக் கவ்வளவு உத்தியோகம் உயரும். எவ்வளவுக் கெவ்வளவு குறைவாகப் புகழுகிறார்களோ, அவ்வளவுக் கவ்வளவு உத்தியோகம் தாழும்.

சரி, என் கட்டுரைகளைக் குறை கூறுகிறவர்களின் கதி என்ன? சந்தேகமென்ன? அதோகதிதான்!

வைஸராய் தாம் உத்தியோகம் ஏற்றுக்கொண்ட அன்றே, முதல் முதல் காரியமாக, நாடோடித் தற்காப்புச் சட்டம் என்று ஒரு சட்டம் இயற்றுவார்.

இந்தச் சட்டத்தின்கீழ், என் கட்டுரைகளைக் குறைவாகக் கூறினதாகவோ, அல்லது பிறரைக் குறைகூறத் தூண்டினதாகவோ, அல்லது பிறர் குறை கூறும் போது பக்கத்தில் நின்று கேட்டுக் கொண்டிருந்ததாகவோ, குற்றவாளியானாலும் சரி, அல்லது சந்தேகப்பட்டாலும் சரி, உடனே கைது செய்யப்பட்டு, ஏழு வருஷக் கடுங்காவல் தண்டனையோ, அல்லது ஐம்பதினாயிரம் ரூபாய் அபராதமோ, அல்லது இரண்டுமோ விதிக்கப்படுவார்கள். கால வரையறையின்றிக் காவலில் வைப்பதற்கும் கவர்னர்களுக்கு விசேஷாதிகாரங்கள் அளிக்கப்படும்.

(என்ன அடுத்த வீட்டு அண்ணாசாமி அய்யர்! எதற்காகச் சிரிக்கிறீர்?...

# நான் சர்வாதிகாரியானல்!

— நாடோடி —

நான் சர்வாதிகாரியானல் என்ன பண்ணுவேன் என்று தெரிந்து கொள்வதற்கு, நான் யார் என்று நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டியது மிகவும் அவசியம்.

நான் ஒரு எழுத்தாளன்.

எழுத்தாளன் என்றதும், எழுத்தாளன் யார், அவன் இலட்சணங்கள் என்னென்ன என்று பிரச்னை எழுகிறது.

இதுவரை யாரும் இந்தக் கேள்விக்குச் சரியான பதில் அளித்ததாகத் தெரியவில்லை. எழுத்தாளர் மகாநாடு கூட்டுகிறவர்களும், எழுத்தாளர் சங்கங்கள் ஏற்படுத்துகிறவர்களும்கூடச் சரியான பதில் வைத்திருப்பதாகத் தெரியவில்லை.

கந்தலைக் கட்டிக்கொண்டு, எலும்பும் தோலுமாக இருக்கிறவர்கள்தான் எழுத்தாளர்கள் என்று சிலர் அபிப்பிராயப்படுகிறார்கள். ஒருவன் எவ்வளவுக் கெவ்வளவு கந்தலைக் கட்டிக் கொண்டிருக்கிறானே, அவ்வளவுக் கவ்வளவு பெரிய எழுத்தாளன் என்பது இவர்கள் சித்தாந்தம். இவர்களிடம் பெரிய எழுத்தாளன் என்று பெயர் வாங்குவதற்காக நானும் கந்தலைக் கட்டிக் கொண்டு நிற்கத் தயார்தான். ஆனால் சரக வீட்டில் ஒரு கந்தலையாவது விட்டு வைத்தால்தானே? எல்லாவற்றையும் தான் என் பெண் அருவின் உபயோகத்துக்காக எடுத்துக்கொண்டு விட்டாளே?

இன்னொரு சாரார் இருக்கிறார்கள். இவர்கள் கணக்குப்படி ஒரு நாளைக்கு ஒரு ரூபாய் புகையிலைக்குக் குறையாமல் மென்று விழுங்குகிறவர்கள் தான் எழுத்தாளர்கள். இத்தகைய எழுத்தாளர்கள் கையில் எப்பொழுது பார்த்தாலும் வெற்றிலைப் பாக்கு டப்பா விளங்கிக் கொண்டிருக்கும். இவர்கள் எப்பொழுது பார்த்தாலும் வாயில் புகையிலை அடக்கிக் கொண்டிருப்பார்கள் ஆதலால் யாருடனும் அதிகமாய்ப் பேச மாட்டார்கள். அப்படிப் பேசினாலும் 'வழா, வழா, குழ, குழா' பாஷையில் தான் பேசுவார்களாதலால் இவர்கள் பேசுவது யாருக்கும் புரியாது.



கந்தலைக் கட்டிக்கொண்டு......

சிலர் தங்களைத் தாங்களே எழுத்தாளர்கள் என்று காட்டிக் கொள்வதற்காக ஒரு யுக்தி கையாளுகிறார்கள். இந்த நக்கீரர்கள் எப்பொழுது பார்த்தாலும் பிறர் எழுதும் எழுத்தில் ஏதாவது குறை கண்டு பிடித்துக் கொண்டே இருப்பார்கள். எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாகக் குறைகள் கண்டு பிடிக்கிறார்களோ, அவ்வளவுக் கவ்வளவு தாங்கள் பெரிய எழுத்தாளர்கள் என்பது இவர்கள் எண்ணம்!

ஆனால் என்னைக் கேட்டால், ஒருவன் எழுத்தாளனா, இல்லையா என்று கண்டு பிடிப்பதற்கு அவனுக்குப் பின் கண்ட குணம் இருக்கிறதா, இல்லையா என்று பார்ப்பதுதான் என்பேன்.

உண்மையான எழுத்தாளனுக்கு அவனை என்ன வைதாலும், திட்டினாலும் கோபம் வராது. ஆனால் அவன் எழுத்தைப் பற்றி ஏதாவது குறை கூறி விட்டோமோ கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளி விட்டுத்தான் மறு காரியம் பார்ப்பான். அதே மாதிரி அவனை என்ன புகழ்ந்தாலும், தூக்கி வைத்தாலும் மசியமாட்டான். 'இந்திரனே, சந்திரனே' என்று சொன்னாலும்கூட ஏமாற மாட்டான். ஆனால் அவன் எழுத்தைப் புகழ ஆரம்பித்தாலோ உடனே நம்மைக் கட்டிப் பிடித்து ஆலிங்கனம் பண்ணிக் கொண்டு விடுவான். நாம் பிறகு அவனை எப்படி ஆட்டி வைத்தாலும் அதன்படி ஆடுவான்.

உண்மையான எழுத்தாளனுக்கு இருக்க வேண்டிய இந்தக் குணம் எனக்கு அதிகம் இருப்பதால் நான் சர்வாதிகாரியானல் என்ன பண்ணுவேன் என்பதை நீங்களே ஊகித்துக் கொள்ளலாம்.

முதல் காரியமாக என் மாமனாரை இந்த நாட்

வயது சென்ற காலத்திற்காக






ரூ. 1000க்கு

ரூ. 1500.

பனிரெண்டு வருஷங்களில் போட்ட முதலில், 50 சதவிகித உயர்வு. நேஷனல் சேவிங்ஸ் சர்ட்டிபிகேட்டுகளில் நீங்கள் பூரண பாதுகாப்புடன் ரூ. 10 முதல் ரூ. 6,000 வரையில் போட்டுவைக்கலாம்.

வருமான வரி கிடையாது.

# நேஷனல் சேவிங்ஸ் சர்ட்டிபிகேட்ஸ்

அவைகளை சர்க்காரால் நியமிக்கப்பட்ட அதிகாரம் பெற்ற ஏஜண்டுகளிடமோ, அல்லது சேவிங்ஸ் பீரோ அல்லது தபால் ஆபீஸ்களிலோ வாங்குங்கள்

AAA 1254 TM

டிராமிலும், பஸ்ஸிலும் சம உரிமை கொடுக்கிறார்களாம்! "சம உரிமை கொடுக்கிறோம்; எங்களைப்போல் நீங்களும் நின்றுகொண்டு பிரயாணம் செய்யுங்கள்!" என்கின்றனர்.

எவ்வளவுதான் புருஷர்கள் எங்களை அடக்கப் பார்த்தாலும், மேலே சொன்னபடி, கடைசியில் வெற்றி என்னவோ எங்களதுதான்! ஒரு தடவை அண்ணா உளுந்து கடைக்குப் போய், காலிப் பையுடன் திரும்பி வந்து விட்டான். உடனே நானும், என் மன்னி லீலாவும் கடைக்குப் போய் உளுந்து கொடுத்தால்தானாயிற்று, இல்லாவிட்டால் வீட்டிற்குப் போக மாட்டோமென்று கடையிலேயே உட்கார்ந்து விட்டோம். வேறு வழியில்லாமல் கடைக்காரன் எங்களுக்கு உளுந்து கொடுத்தனுப்ப வேண்டியதாயிற்று!

ஸ்திரீகள் வாயாடி என்கிறார்களே, அந்த வாயாடித் தனத்தால்தானே நாங்கள் காரியத்தைச் சாதித்தோம்?

அண்ணா சொல்கிறான், எங்களுக்கு வக்கீல் வேலை கொடுத்தால் கேஸ் நன்றாய் ஜெயமாகுமென்று. வீட்டில் யாருக்கு எது வேண்டுமானாலும் வாங்கி வருபவர் நாங்கள்தான்! இப்பொழுதெல்லாம் எங்கேயும் ஸ்திரீகளுக்குத் தானே முதலில் சாமான்கள் கொடுக்கின்றனர்?

ஒரு நாள் அண்ணா எங்களுடன் ஜவுளிக் கடைக்கு வந்தான். கடைக்காரர் எங்களுக்குப் பிரமாதமாக உபசாரம் செய்ய ஆரம்பித்தார். அண்ணாவைக் கவனிக்கவே இல்லை. பாவம்! அண்ணா இனிமேல் எங்களுடன் எங்கும் வெளிக் கிளம்புவதில்லை யென்று பிரதிக்ஞை செய்திருக்கிறான்!

ஸ்ரீமதி ஸரோஜினி தேவி, விஜயலக்ஷ்மி பண்டிட் இவர்கள் பேச்சை எடுத்தால் அண்ணாவுக்குக் கோபம் வந்து விடுகிறது. "அவர்களால்தான் உங்களுக்கு இவ்வளவு வாய் உண்டாயிருக்கிறது. 'தேமே' என்று சமையலறையில் கிடந்தவர்களை அவர்கள்தான் கிளப்பி விட்டிருக்கின்றனர். நான் மட்டும் நேருஜியாக இருந்தால் விஜயலக்ஷ்மி பண்டிட்டுக்கு இவ்வளவு இடம் கொடுத்திருக்க மாட்டேன்" என்று சீறுகிறான்.

ஸ்திரீகள், ஸ்திரீகளென்று கரிக்கிறார்களே தவிர, இவர்களுக்கு ஸ்திரீகளில்லாமல் சரிப்படுவதில்லை. எதற் கெடுத்தாலும் ஸ்திரீகள்தான் முன் வர வேண்டி இருக்கிறது. வைதிகக் காரியம் முதல், வெளி விவகாரங்கள் வரை, படித்தவர்களோ, படிக்காதவர்களோ இது வரை குடும்பத்தை நடத்துபவர்கள் ஸ்திரீகளே!

ஒரு விஷயம் எனக்குப் புரியவில்லை. ஸிகரெட்டிற்கும், க்ஷவர ப்ளேடுகளுக்கும் ஸ்திரீகளின் படங்களை விளம்பரங்களில் ஏன் போடுகிறார்கள்? இவற்றை ஸ்திரீகளா உபயோகப் படுத்துகின்றனர்? யார் என்ன சொன்னபோதிலும் காந்திஜியின் ஆதரவு இருக்கும்போது எங்களுக்கு என்ன குறை? அவர் ஸ்திரீகளின் சம உரிமையை முழு மனதோடு ஆதரிக்கிறாரல்லவா?

இந்தக் கட்டுரை ஆரம்பித்தவுடனேயே எனக்கு ஒரு வெற்றி கிடைத்து விட்டது. அண்ணா ஸ்திரீகளைப் பற்றிக் குறை சொல்வதைக் கொஞ்சம் நிறுத்தி இருக்கிறான். "எங்களைப் பற்றி ஏதாவது சொன்னாயோ, கட்டுரை எழுதி உங்களுடைய காரியங்களை யெல்லாம் அம்பலத்திற்குக் கொண்டு வந்து விடுவேன்!" என்று மிரட்டினேன். உடனே அடங்கி விட்டான். இதுவே ஒரு வெற்றி அல்லவா?

## சந்தா நேயர்களுக்கு

நமது சந்தா நேயர்களிடமிருந்து பிரதி தினமும் பல கடிதங்கள் காரியாலயத்துக்கு வருகின்றன. 'சந்தா எப்பொழுது முடியும்?' என்று சிலர் ஞாபகப்படுத்தச் சொல்கிறார்கள். 'பழைய விலாசத்துக்குப் பத்திரிகை அனுப்ப வேண்டாம்' என்று சிலர் ஞாபகப்படுத்துகிறார்கள். ஆனால், அக்கடிதங்களில் தங்கள் சந்தா நம்பரை மட்டும் குறிப்பிட மறந்து விடுகிறார்கள். இதனால் சந்தா நம்பரைக் கண்டு பிடித்து அவர்கள் விருப்பத்தைப் பூர்த்தி செய்வதற்கு வீண் காலதாமதம் ஏற்படுகிறது. ஆகவே, நேயர்கள் கடிதத்திலோ, மணியார்டரிலோ தயவு செய்து பிள்ளையார் சுழியுடன் முதலில் சந்தா நம்பரையும் போட்டு வைத்து விட்டால், அவர்களுக்கும் சிரமமில்லை; நமது காரியாலயத்தாருக்கும் எவ்வளவோ சௌகர்யமாயிருக்கும்.

# வெற்றி நமக்கே

நீலா

தலைப்பைக் கண்டு கேச தேசத்தைச் சேர்ந்தவளோ என்று நினைக்கிறீர்கள். அதொன்றுமில்லை. நான் எங்கள் கட்சியைச் சேர்ந்தவள். எங்கள் கட்சி என்பது ஸ்திரீகள் சம உரிமை கட்சிதான்.

அண்ணா சொல்கிறான், ஸ்திரீகளுக்குச் சம உரிமையே கொடுக்கக் கூடாதாம். "இப்பொழுதே நீங்கள் தலையி லேறுகிறீர்கள். உங்களுக்குச் சம உரிமை கொடுத்தால் எங்கள் பாடு அதோகதிதான்! உங்களை வைக்கத் தகுந்த இடத்தில்தான் வைக்க வேண்டும்." என்று அவன் உறுமுகிறான்.

புருஷர்களுக்கே ஸ்திரீகளென்றால், கிள்ளுக் கீரையாக இருக்கிறது! இல்லாவிட்டால் அவர்களை அடிமை போல் நடத்துவதோடில்லாமல், குறை வேறு சொல்லித் திரிவார்களா? கல்யாணமான கொஞ்சநாள் வரை, "நீ இந்திரன், சந்திரன்" என்று புகழ்வது, எங்கு போனாலும் தவறாமல் தங்களுடன் அழைத்துச் செல்வது, தங்கள் சிநேகிதர்களுக்கெல்லாம் அறிமுகம் செய்து வைப்பது! அப்புறம் மனைவியைச் சமையலறையில்தான் பார்க்கலாம். 'அதி வ்ருஷ்டி அநா வ்ருஷ்டி' என்று சொல்வார்களே, அது இந்தப் புருஷர்களுக்குத்தான் சரியாக இருக்கிறது!

அண்ணா. இன்று பாகிஸ்தான் கூச்சலுக்கெல்லாம் ஆதி காரணம் பெண்கள்தான் என்று பழி சொல்கிறான். அவன் கூற்றைக் கேளுங்கள்: ப்ருத்விராஜன், சம்யுக்தைக்காக சண்டை போட்டதில்தான் முகம்மத் கோரி இந்தியாவில் நுழைய முடிந்ததாம்! அதிலிருந்துதானே முகம்மதியர்கள் இங்கே குடி புகுந்தனர் என்கிறான். எப்படியிருக்கிறது? ஸ்திரீகளின் மேல் குறை சொல்ல, பழைய சரித்திரக் குப்பையை யெல்லாம் கிளறி விட்டிருக்கிறான். ஒரு பெண்ணிற்காகத்தானே அவர்கள் சண்டை போட்டு, மூன்றாமவனை உள்ளே விட்டார்கள் என்பதை அவன் யோசிக்கவில்லை. ஜான்ஸி லக்ஷ்மிபாயைச் சொன்னால் எங்கோ ஆயிரத்தில் ஒன்று என்று சொல்லி மழுப்பி விடுகிறான். 'பாரத மாதா' என்ற பெயரிருக்கும் வரை இந்தியா இப்படித்தான் அடிமையாய் இருக்கும் போலிருக்கிறது என்று விசனப்படுகிறான் அண்ணா. வேண்டுமானால் ஜெர்மனி முதலிய நாடுகளைப் போல் இந்தியாவையும் 'தாய் நாடு' என்பதற்குப் பதிலாக, 'தந்தை நாடு' என்று சொல்லிக் கொள்ளட்டுமே!



மனைவி இறந்து ஒரு மாதமாவதற்குள் கணவன் வேறு பெண் பார்க்கத் தொடங்கி விடுகிறான். நாம் தாத்தா, பேத்தியாக எண்ணும் ஜோடிகள் தம்பதிகளாயிருக்கின்றனர். மூன்று நான்கு கல்யாணம் செய்து கொண்டிருக்கும் புருஷர்களும் உண்டு. விதவா விவாகத்தை அமுலுக்குக் கொண்டு வரவும் புருஷர்கள்தான் கிளர்ச்சி செய்கின்றனர். அவர்களுடைய கிளர்ச்சியும் புத்தக அளவிலேதா னிருக்கிறது. நடத்தைக்கு வரவில்லை. இதிலிருந்தே பெண்களின் மனோதிடம் வெளியாகிறதல்லவா? பெண்ணைப் பெற்றவர், மாப்பிள்ளைக்குப் பெண்ணையும் கொடுத்து, வரதட்சிணையும் ஆயிரக்கணக்கில் கொடுக்க வேண்டுமாம். பெண்களென்ன, அப்படி தெருவிலா மலிந்து கிடக்கிறார்கள், பணத்தையும் கூடக் கொட்டிக் கொடுக்க? ஒரு பெண் டாக்டருக்கு படித்துக் கொண்டிருக்கும் போது மணமானால், கணவன் கூடவே பெண்ணையும் அழைத்துப் போய் விடுகிறான். இத்தனை நாள் படித்த அரைகுறை டாக்டர் படிப்பும் வீண்; அதற்குச் செலவழித்த பணமும் விரயம்!

இதற்கெல்லாம் சம உரிமை கேட்டால், இக்காலத்து வாலிபர்கள்




## பெண்களுக்கு

[ஆசிரியர் : மகாத்மா காந்தி; மொழி பெயர்த்தோர் : அ. வெ. நடராஜன், வெ. ராமசாமி; பிரசுரம் : புதுமைப் பதிப்பகம், காரைக்குடி; விலை : ரூ. 6.]

"ஆண்களோடு பெண்களும் சரி நிகர் சமானமாக வாழ்வோம் இந்த நாட்டிலே" என்று பாரதியார் கூறிப்போந்த இந்த நாட்டில் ஆண்களாகிய நாம் இன்னும் பெண்களைத் தாழ்மைப் படுத்தியே வைத்திருக்கிறோம். பெண்ணாய்ப் பிறந்தவர்கள் "ஆணாய்ப் பிறக்காமல் போனோமே" என்று வருந்தப்படும் நிலையிலேயே வைத்திருக்கிறோம். இந்த நிலை மாறி ஆண்களோடு பெண்களும் சரி நிகர் சமானமாக வாழ்வில் பங்கெடுத்துக் கொள்ள நாம் அனுமதிக்காவிடில் நம் சமூகம் சிதைந்து குலைந்து போய் விடும் என்பதில் சந்தேகமில்லை. இந்த உண்மையை உணர்ந்தே உலகத்துப் பெரியார்கள் எல்லோரும் பெண்களை நாம் மிகவும் கௌரவமான நிலையில் வைத்துக் கொள்ளவேண்டிய அவசியத்தை வலியுறுத்தி வந்திருக்கிறார்கள்.

மகாத்மா காந்தியும் இது விஷயத்தைப் பற்றி எழுதியும், பேசியும் வந்துள்ளார். அவருடைய கட்டுரை — பிரசங்கங்களின் தொகுப்புதான் இப்புஸ்தகம். 'பெண்களுக்கு' என்று புஸ்தகத்துக்குப் பெயர் கொடுத்திருப்பதை விட 'ஆண்களுக்கு' என்று பெயர் கொடுத்திருந்தால் இன்னும் பொருத்தமாக இருக்கும் என்று தோன்றுகிறது. ஏனெனில் புத்தகத்தை முக்கியமாகப் படித்துத் தங்களைச் சீர்திருத்திக் கொள்ள வேண்டியவர்கள் ஆண்கள்தான்!

காந்தி மகானின் ஆங்கில நடை மிக எளியது; ஆனால் இதயத்திலே நேராகப் போய்த் தைக்கும் சக்தி வாய்ந்தது. மொழி பெயர்ப்பிலும் அத்தகைய எளிமையையும் சக்தியையும் காண்கிறோம்.

பதிப்பின் சிறப்பைக் குறித்துச் சொல்லவே முடியாது; அவ்வளவு பிரமாதம்.

## உலக நிலை

[ஆசிரியர் : சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்; பிரசுரம் : சக்தி காரியாலயம், சென்னை; விலை : சாப்பா ரூ. 1—8—0, காலிகோ ரூ. 2.]

மகா கோரமான யுத்தத்தில் மூழ்கிக் கிடக்கும் இந்த உலகம் யுத்தத்துக்குப் பிறகு எப்படி மாறும் என்று தெரிந்து கொள்ள எல்லோருக்கும் ஆவலாக இருக்கும். அதை ஒருவாறு ஊகித்து அறிந்து கொள்வதற்கு யுத்தத்துக்கு முந்தைய உலகம் எப்படி இருந்தது என்று தெரியவேண்டியது மிகவும் அவசியம். அதைத்தான் ராஜாஜி இச் சிறிய நூலில் புள்ளி விவரங்களுடன் எடுத்துக் கூறியிருக்கிறார். உலகில் உள்ள ஒவ்வொரு நாட்டின் விஸ்தீரணம், ஜனத் தொகை, இயற்கைச் சம்பத்து, வியாபார நிலை, பிரஜைகளின் செல்வ நிலை, உணவுப் பொருள்கள், தொழிற் பொருள்கள் முதலியவற்றின் உற்பத்தி ஆகிய அநேக விஷயங்களைப் பற்றிய விவரங்கள் இப் புஸ்தகத்தில் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

வருங்கால உலக நிலையைப் பற்றிப் பூராவும் நம்மையே ஊகித்துக் கொள்ளும்படி ராஜாஜி விட்டு விடவில்லை. இப்படி இப்படி நடக்கலாம் என்றும் ஊகம் செய்து குறிப்பிட்டிருக்கிறார். ஐரோப்பாவின் நிலைமை இப்படியாகலாம் என்று ஆறு மாதத்துக்கு முன்பு ராஜாஜி இந்த நூலில் எழுதியிருப்பதெல்லாம் இப்போதே உண்மையாகி வருவதைக் காண்கிறோம்.

உலக ஞானத்தையும் அரசியல் அறிவையும் வளர்த்துக் கொள்வதற்கு இந்த நூல் இன்றியமையாத சாதனமாகும்.

## கனகாம்பரம்

[ஆசிரியர் கு. ப. ராஜகோபாலன்; பிரசுரம்: அல்லயன்ஸ் கம்பெனி, சென்னை; விலை: ரூ. 2.]

"நண்பர் ராஜகோபாலன் மறைந்து போனார். என்ன கொடுமை! எவ்வளவு பொறுக்க முடியாத துக்கம்! ஆனால் ராஜகோபாலன், பத்து வருஷங்களுக்குள் தமிழ் இலக்கியத்துக்குச் செய்த தொண்டைப் பற்றி நினைத்தால் அது என்னைப் பிரமிக்க வைக்கிறது" என்று வ. ரா. கனகாம்பரத்தின் இந்த இரண்டாவது பதிப்புக்கு அளித்திருக்கும் முகவுரையில் உருக்கமாகக் கூறுகிறார். கு. ப. ரா. வின் தமிழ் இலக்கியத் தொண்டிற்குக் கனகாம்பரம் சிரோமணியாக விளங்கும் என்பதில் சந்தேகமில்லை.

---

## காதில் விழுந்தது!



மனைவி:—நான் சொன்னது உங்களுக்குக் காதிலேயே விழவில்லை.

புருஷன்:—ஏன் அப்படிச் சொல்லுகிறாய்? ரொம்ப நன்றாக விழுந்ததே!

மனைவி:—இல்லை; விழவே இல்லை! நான் இருநூறு ரூபாயில் ஒரு புடவை வேண்டுமென்று சொன்னேன். நீங்கள் 'சரி' என்று சொல்லவில்லையே! —சாமா.

# சரஸ்வதி கான சபா, சிதம்பரம்

## ஆண்டு விழா

ஸ்பெஷல் ஸீரிஸ். இணையற்ற சங்கீதக் கச்சேரிகள், நடனங்கள்



### 15 - 12 - 44 வெள்ளிக்கிழமை

திருவாங்கூர் ஆஸ்தான வித்வான் C. N. பாலசுப்ரமணியம் B. A. (Hons) — பாட்டு
கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளை — பிடில்
பாலக்காட்டு மணி — மிருதங்கம்
பழனி சுப்ரமணியப் பிள்ளை — கஞ்சிரா

### 17 - 12 - 44 ஞாயிற்றுக்கிழமை

சங்கீதவாணி M. L. வசந்தகுமாரி & பார்ட்டி — இனிய சங்கீதம்

### 18 - 12 - 44 திங்கட்கிழமை

திருவனந்தபுரம் C. S. கிருஷ்ணய்யர் — பாட்டு
மைசூர் T. குருராஜப்பா — பிடில்
கல்பாத்தி ராமநாதன் — மிருதங்கம்

### 21 - 12 - 44 வியாழக்கிழமை

சங்கீதபூபதி மஹாராஜபுரம் விஸ்வநாதய்யர் — பாட்டு
மாயவரம் கோவிந்தராஜ பிள்ளை — பிடில்
மதுரை C. S. முருகபூபதி — மிருதங்கம்

### 24 - 12 - 44 ஞாயிற்றுக்கிழமை

ஸ்ரீ V. V. சடகோபன் B. A. — பாட்டு
பாலக்காடு C. R. மணி ஐயர் — பிடில்
குத்தாலம் சிவவடிவேல் பிள்ளை — மிருதங்கம்

### 27 - 12 - 44 புதன்கிழமை

மதராஸ் A. பட்டம்மாள் — பாட்டு
,, கோமளவல்லி — பிடில்
,, பாக்யலக்ஷ்மி — மிருதங்கம்

### 28 - 12 - 44 வியாழக்கிழமை

ஸ்ரீ செம்பை வைத்தியநாத பாகவதர் & பார்ட்டி — கந்தர்வ கானம்

### 29 - 12 - 44 வெள்ளிக்கிழமை

மாஸ்டர் T. R. மஹாலிங்கம் — புல்லாங்குழல்
பாப்பா வெங்கட்ராமய்யர் — பிடில்
குத்தாலம் சிவவடிவேல் பிள்ளை — மிருதங்கம்

### 30 - 12 - 44 சனிக்கிழமை

ஸ்ரீமதி S. D. சுப்புலக்ஷ்மி & பார்ட்டி (டைரக்டர் K. சுப்ரமணியம், B. A. B. L. டைரக்ஷனில் மதராஸ் யுனைடெட் ஆர்டிஸ்ட்ஸ் கார்ப்பரேஷன் வாத்ய கோஷ்டியுடன்) } அற்புத நடனங்கள்

விலை டிக்கட்டுகள் : டோனர் ரூ. 30 - 0 - 0. முதல் வகுப்பு. ரூ. 20 - 0 - 0
2 - வது வகுப்பு ரூ. 15 - 0 - 0. 3 - வது வகுப்பு ரூ. 7 - 8 - 0.

R. S. ராமானுஜம்
செக்ரடரி

ஒலிபெருக்கி ஏற்பாடுகள் : திருச்சி ரேடியோ சேல்ஸ் & சர்வீஸ்




## 86. நீதியைத் தழுவுகிறது தருமம்!

சித்திரகூட பர்வதம் உயர்ந்து நிற்கிற மலை.

பரதன் ராமனைக் காண்பதற்காகப் பரிவாரங்களோடு வெகு தூரத்தில் வருகிறான். லக்ஷ்மணன் பார்த்தான். பகையாளியாக வருகிறான் பரதன் என்று எண்ணிக் கோபாவேசத்தில் குமுறிக் கொண்டு நிற்கிறான். அந்த வேளை பரதனும் சமீபமாக வந்து விட்டான்.

மேனி மெலிந்து முகம் வாடிய வண்ணமாய் வருகிறான். லக்ஷ்மணனுக்கு, அவனைப் பார்த்ததும் இதயமே உடைந்து விட்டது. கையிலுள்ள வில் கீழே விழுந்து விட்டது. அப்படியே ஸ்தம்பித்து நின்று விட்டான். இந்த நிலையில் பார்த்தோம் லக்ஷ்மணனை.

மலை ஏறி வருகிற பரதனை இனிப் பார்க்கலாம்.

சிறு பிராயத்திலேயே, இளவரசராய் இருக்கும் போதே, ராமனிடத்தில் அரிய குணங்களைக் கண்டார்கள் ஜனங்கள். இவன் அல்லவா நம்மை ஆளவேண்டும் என்றும் சொல்லிக் கொண்டிருந்தார்கள். ஜனங்களுடைய விருப்பத்தின்படி, தசரதன் நடந்து கொண்டான் என்று சொல்லும்படி ராமனுக்குப் பட்டங் கட்ட ஏற்பாடு செய்து விட்டான். ஆனால் என்ன நேர்ந்தது? ஜனங்களுடைய மனக் கோட்டை தகர்ந்தது. ஜனங்களுக்குண்டான குழப்பமும் வேதனையும் கொஞ்ச நஞ்சமல்ல. லக்ஷ்மிதேவியின் நிலைமை (ராஜ்ய பரிபாலனம்) எப்படி ஆயிற்று பாருங்கள்:

கோதறத் தவஞ்செய்து
குறிப்பின் எய்திய
நாதனைப் பிரிந்தனள்,
நலத்தின் நீங்கினள்,
வேதனைத் திருமகள்
மெலிகின் றாள்,விடு
தூ(து)எனப், — பரதனும்
தொழுது தோன்றினான்.

[கோதறத் தவஞ் செய்து: ஒரு ராஜ்யத்துக்கு ராமன் மாதிரி ஒரு அரசன் சாமான்யமாகக் கிடைக்க மாட்டான், — அப்படிக் கிடைத்தால் அந்த ராஜ்யம் (திருமகள்) அரிய தவம் செய்ததாகத்தான் எண்ண வேண்டும்: குறிப்பின் எய்திய நாதனைப் பிரிந்தனள்: கண்ணுக்கே எதிர்ப்பட்ட நாயகனைப் பிரிந்தவளாய் — பட்டாபிஷேகம் அடுத்த நாழிகையில் நடக்க இருந்ததல்லவா?—நலத்தின் நீங்கினள்: ராமனை அரசனாகப் (மணவாளனாக) பெறுவதை இழந்தவளாய்; வேதனைத் திருமகள்: கஷ்டத்திலிருக்கும் லக்ஷ்மிதேவி: (ராஜ்யம்) மெலிகின்றாள்: குழப்பத்துக்கும் துன்பத்துக்கும் உள்ளாகியவளாய்; விடு தூதென: ராமனைக் கொண்டு வருவதற்கு விட்ட தூதுவனைப் போல: பரதனும் தொழுது தோன்றினான்: தலைமேல் குவித்த கையனாய் பரதன் ராமனை அணுகினான். குறிப்பு:— ராமன் திரும்பி வந்து ராஜ்ய பரிபாலனம் பண்ணவேண்டும் என்ற ஆத்திரம் அயோத்தி மக்களுக்கு எப்படி யிருந்தது. பரதனுக்கும் எப்படி யிருந்தது என்ற விஷயத்தை வெகு அழகாகச் செய்யுளில் உள்ள உருவகம் தெளிவுபடுத்துகிறது. அருமையான பாவங் கொண்ட கவி.]

# TEXTILE CONTROL

## வியாபாரிகளுக்கு எச்சரிக்கை

1914-ம் வருஷம் நவம்பர் 4-ம் தேதி வெளியான இந்திய சர்க்கார் நெ. T. B. (1) 29/44 அறிக்கையின் பிரகாரம், 1943-ம் வருஷத்திய பஞ்சு, துணி நூல் கட்டுப்பாடு உத்தரவின் 14-ம் பிரிவு திருத்தி யமைக்கப் பட்டிருக்கிறது. இதன்படி, 1944-ம் வருஷம் டிஸம்பர் 31-ம் தேதிக்குப் பிறகு, 1943-ம் வருஷம் ஆகஸ்ட் முதல் தேதிக்கு முன் இந்தியாவில் தயாராகி 'பாக்' செய்யப்பட்ட நூலையோ, துணிகளையோ, 1943-ஜூலை 31 தேதிக்குப் பின்னும், 1944 ஜனவரி முதல் தேதிக்கு முன்னும் பாக் செய்யப் பட்ட 'டெக்ஸ் மார்க்' துணிகளையோ நூலையோ எந்த வியாபாரியும் வாங்குவதோ, விற்பதோ, விற்பனை செய்யாமல் வைத்திருப்பதோ குற்றமாகும்.

எந்த விதமான துணிகளையும் நூலையும் இந்தியாவில் உற்பத்தியானதா யிருந்தாலும் சரி, வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டதா யிருந்தாலும் சரி, சரக்கின் மேல் குறிப்பிட்டிருக்கும் தேதியிலிருந்து 12 மாதங்களுக்குள் விற்றுத் தீர்ந்தாக வேண்டும். குறிப்பிட்ட தேதிக்கு ஆறு மாதத்திற்கு மேல் சரக்குகள் உள்ள பேல்களைத் திறக்காமல் வைத்திருக்கக் கூடாது. பேல்களிலுள்ள மேல் பாகம், சட்டம் முதலியன நீக்கப்படா விட்டால் பேல்களைத் திறக்கவில்லை என்று ஷ திருத்தத்தின்படி முடிவு செய்யப்படும்.

தன் சக்திக்கு மீறிய காரணங்களினால் சரக்குகள் விற்க முடியாமற் போயிற்று — என்று ருஜூப்படுத்த முடிந்தாலொழிய எந்த வியாபாரியும் டெக்ஸ்டைல் கமிஷனர் குறிப்பிட்ட கால வரையறைக்கு மேல் சரக்குகளை வைத்துக்கொள்ள அனுமதிக்கப் படமாட்டார்கள். ஷ உத்தரவை மீறுகிறவர்கள் தங்கள் வியாபார லைஸென்ஸை இழப்பதல்லாமல், பிராஸிக்யூட் செய்யப்படுவார்கள். எந்த சாமான்களை வைத்துக்கொண்டு குற்றம் செய்திருக்கிறார்களோ, அந்த சாமான்கள் பறிமுதல் செய்யப்படும்.

எம். கே. வெள்ளோடி,
டெக்ஸ்டைல் கமிஷனர்
கவர்ன்மெண்ட் ஆப் இந்தியா



# இப்போது சேமிக்கப்படும் ஒவ்வொரு ரூபாயும் . . .

**யுத்தம் நின்றவுடன் அதிகப் பொருள் வாங்க உதவும். இப்போதுள்ள உயர்ந்த விலையில், நாம் கொடுக்கும் தொகைக்குத் தகுந்த அளவு பொருள்கள் கிடைப்பதில்லையென்று சாதாரண அறிவு படைத்தவர்களுக்குக் கூடத் தெரியும். அன்றியும் விலைகள் குறைந்து கொண்டு வருகின்றன என்பதை நினைவில் வையுங்கள். ஒரு வருஷத்திற்கு முன்பு, துணி, உணவு தானிய வகைகள், மருந்து வகைகள் ஆகியவற்றின் விலைகளையும், இப்போது அவை விற்கும் விலைகளையும் ஒப்பிட்டுப் பாருங்கள். அறிவாளி, பணத்தைச் சேமித்தான். ஆகவே, முன்னைவிட இப்போது குறைந்த விலைக்கு வாங்கக் கூடும். இப்போது இயன்றவரை சேமித்து சமாதானம் மீண்டும் ஏற்பட்ட பிறகு, உங்கள் பணத்தைக் கொண்டு இரண்டு மடங்கு பொருட்கள் வாங்குவதுதான், எல்லாவற்றைவிட மகா புத்திசாலித்தனமான காரியம்.**

நீங்கள் சேர்த்து வைக்கும் தொகையை பத்திரமான வகையில் முதலீடு செய்கிறோமா என்பது பற்றி நிச்சயப் படுத்திக் கொள்ளுங்கள். இந்தக் காலத்தில் நகைகள், நிலம், கட்டடங்கள், செய்பொருட்கள், பண்டங்கள் முதலியவற்றின் மேல் போட்டு வைக்கும் தொகைகளால் கஷ்டந்தான். அவற்றின் விலைகள் அளவிற்கு மீறி அதிகமாயிருக்கின்றன. அவை என்றைக்காவது இறங்கத்தான் செய்யுமென்பது நிச்சயம்.

பத்திரமாயிருக்கும் பொருட்டும், தக்க பலனளிக்கும் பொருட்டும், பணத்தை, அரசாங்க கடன் பத்திரங்களிலும் நேஷனல் சேவிங்ஸ் சர்டிபிகேட்டுகளிலும், இன்ஷூரென்ஸ்களிலும், கூட்டுறவுச் சங்கங்களிலும், தபாலாபீஸ் சேமிப்பு நிதியிலும் போட்டு வையுங்கள்.

## உங்களால் இயன்றவரை மிச்சப் படுத்துங்கள்.

## மிச்சப் படுத்தியதை முதலீடு செய்யுங்கள்.

**தேசியப் போர்முனையார் விடுக்கும் தேசிய வேண்டுகோள்**

AAA 1113 TM

கூட்டத்திலும் தாழ்த்தப்பட்ட ஜனங்களுக்குத் தனி ராஜ்யம் வேணும்னு பேசிக்கிட்டிருக்காரு; நம்ம ஜாதியும் ஒண்ணு, அவரு ஜாதியும் ஒண்ணுன்னு சொல்றாரு. அதாலே அவரைக் கேட்டா ஒருவேளை அவர் வீட்டுத் திண்ணையிலாச்சும் நமக்குக் கொஞ்சம் இடம் விட்டாலும் விடுவாரு, இல்லையா?"



"கேட்டுத்தான் பாரேன்."

"இரு; கேட்டுக்கிட்டு வரேன்."

"அம்மா! ஐயா இருக்காரா?"

"யாரடா, அது? பொன்னையாவா?"

"ஆமாங்க!"

"எங்கே வந்தே?"

"வெள்ளம் வந்து என் வீட்டை அடிச்சுக் கிட்டுப் போயிட்டுதுங்க; அதைத் திருப்பிக் கட்ட வழின்னு கையிலே காசில்லே! பனியிலே படுத்துப் படுத்துக் குழந்தை வேறே காய்ச்சலாப் படுத்துக் கிடக்குது. அதாலே உங்க வீட்டுத் திண்ணையிலாச்சும் கொஞ்சம் இடம் கொடுத்தீங்கன்னா, என்னமோ உங்கப் புண்ணியத்தாலே பொழைச்சுப் போவோம்!"

"சரி, நாளைக்கு வாடா!"

"பத்மா! பொன்னையாவின் வீடு வெள்ளத்திலே போயிடுத்தாம்; நம்ம வீட்டுத் திண்ணையிலே கொஞ்சம் இடம் வேணும்னு கேட்கிறான்!"

"நல்ல வேலை! போயும் போயும் அவனைக் கொண்டு வந்து......"

"உஸ்! யாராவது கேட்டுக்கொண்டே உள்ளே வந்துவிடப் போகிறார்கள்!"

"யாரையும் காணோம்! — ஆமாம், அதற்கு நீங்கள் என்ன சொன்னீர்கள்?"

"என்னத்தைச் சொல்வது? தாழ்த்தப்பட்டோருக்குத் தனி ராஜ்யம் கேட்கும் நான், என் வீட்டுத் திண்ணையில் அவனுக்குக் கொஞ்சம் இடமில்லையென்றால்?"

"அதற்கு நான் ஒரு வழி சொல்லுகிறேன், கேளுங்க!" என்று பத்மா ஓடோடியும் வந்து அவர் காதோடு காதாக ஏதோ சொல்லி வைத்தாள்.

அதைக் கேட்டதும், தர்மலிங்கம் பிள்ளையின் முகம் மலர்ந்தது. "அடியே! 'பெண் புத்தி பின் புத்தி' என்று சொன்னார்களே, அவர்களைக் கொண்டு போய் உடைப்பில் தான் போட வேண்டும்!" என்றார்.

மறு நாள் பொன்னையா வந்தான். "ஏண்டா, பொன்னையா! எத்தனை நாளைக்கு நீ திண்ணையில் பொங்கித் தின்று கொண்டிருக்க முடியும்? இந்தா, இந்த ஐம்பது ரூபாயைக் கொண்டு போய் உனக்கென்று ஒரு வீட்டைக் கட்டிக் கொள்!" என்று அவனிடம் ஐம்பது ரூபாயை எடுத்துக் கொடுத்தார் தர்மலிங்கம் பிள்ளை.

நல்ல வேளையாகப் பொன்னையா மூர்ச்சையடைந்து கீழே விழவில்லை. அகங் களித்து இரு கைகளையும் ஏந்தி அந்தப் பணத்தைப் பெற்றுக்கொண்டு, "நீங்க நல்லாயிருக்கணும், சாமி!" என்று நெடு மரம் போல் அவர் காலில் விழுந்தான்.

"ஆமாம்; பணம் கொடுக்காவிட்டால் கெட்டுப் போய் விடுவேனாக்கும்!" என்று முணுமுணுத்துக் கொண்டே உள்ளே சென்று விட்டார் தர்மலிங்கம்.

★

ஆனந்தக் கடலில் நீந்திக் கொண்டு வந்த பொன்னையா, அடுத்த நிமிஷத்தில் தன் இருப்பிடம் வந்து சேர்ந்தான். ஆவலே உருவாய்த் தன்னை எதிர்பார்த்துக் கொண்டிருந்த சின்னியிடம் ஐம்பது ரூபாயைக் கொடுத்தான்.

"ஐயோ சாமி! இத்தனை பணம் ஏது?"

"ஐயாதான் கொடுத்தாரு!"

"மவராஜர்! இந்த ஏழைங்களுக்கு இவ்வளவு பணம் கொடுத்தாரே, அவரு மனுசர் இல்லே: தெய்வம்!"

"தெய்வந்தான்! இல்லேன்னா, என்னை உன் வாயிலேருந்து காப்பாத்தியிருக்க முடியுமா?" என்றான் பொன்னையா சிரித்துக் கொண்டே.

அந்தப் பணம் மனமுவந்து கொடுத்த பணமல்ல, மனைவி சொன்ன யோசனையின் பேரில் தம் மானத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காகக் கொடுத்த பணம்; தன்னை எப்பொழுதுமே தாழ்த்தப்பட்டவனாக வாழச் செய்யும் பணம் என்பது பொன்னையாவுக்கு எப்படித் தெரியும்?

# பொன்னையா

விந்தன்

"என்ன, சின்னி! வயிற்றைக் கிள்ளுது: சோத்தை யாச்சம் வடிச் சயா?" என்று கேட்டுக் கொண்டே வந்தான் பசியால் வாடிய பொன்னையா.

"நீயும் கேட்கிறயே! வெட்ட வெளி யிலே அடுப்பைப் பத்த வச்சிட்டு நான் அவதிப் படறேன். குழந்தை வேறே பனியிலே படுத்துப் படுத்துக் காலையி லேருந்து காயலாப் படுத்துக் கிடக்குது. அதாலே எனக்கு வேலையே ஒண்ணும் ஓடலே. அடிக்கிற காத்துலே அந்த அடுப்பு கொஞ்சமாச்சும் எரியுதா?"

"என்ன என்ன சின்னி பண்ணச் சொல்றே? என் அப்பன் எனக்கு ஆஸ்தியா வைச்சுட்டுப் போன அந்த ஒரே ஒரு பொத்தல் குடிசையையும் பாழாய்ப் போன வெள்ளம் வந்து அடிச்சுக்கிட்டுப் போயிடுச்சு. இப்ப அந்த வீட்டைக் கட்டறதுன்னு கையிலே பணமில்லே!"

"எதுக்குத்தான் ஒங்கக்கிட்ட பணம் இருக்குது? நீயும் வந்து வெடிஞ்சயே, என் தலையிலே! உன்னைக் கல்யாணம் செய்துகொண்டு நான் என்ன சுகத் தைக் கண்டேன்? நகை உண்டா, கட்டு உண்டா? இல்லை, நல்ல புடவையாச்சும் ஒண்ணு உண்டா? நான் வந்த வழி! ......ஊ...... ஊம் ...... ஊ ......ஊம்... ."

"அழு, அழு! நல்லா அழு! நான் அந்தத் தெருப்பக்கமாப் போயிட்டு வரேன்!" என்று கீழே வைக்கப் போன அடுப்பத்தை மீண்டும் அக்கத்தில் வைத்துக்கொண்டு நடந்தான் பொன்னையா.



★

வீட்டுக்கு வீடு 'ஸேப்டி ரேஸர்' வைத்துக் கொண்டிருக்கும் இந்த நாளிலே, பொன்னையாவின் பிழைப்பு ஜீவனதசையை அடைந்திருந்தது. கிடைத்ததைக் கொண்டு வயிற் றைத் திருப்தி செய்து கொள்ளவே முடியவில்லை. இந்த லட்சணத்தில் அவன் இழந்த வீட்டை மீண்டும் சிருஷ் டிசெய்து கொள்ள வேண்டுமென்றால் குறைந்தது ஐம்பது ரூபாயாவது வேண் டும் — அடே அப்பா! இந்த ஜன்மத்தில் அவன் அத்தனை ரூபாயைக் கண்ணா லாவது பார்க்க முடியுமா?

உலகம் கடவுளால் சிருஷ்டிக்கப் பட்டதுதான்; அது எல்லோருக்கும் சொந்தம்தான். ஆனால், வல்லோர்கள் சிலர் அதை ஆளுக்குக் கொஞ்சமாகப் பங்கு போட்டுக்கொண்டு, "நான்தான் கடவுளின் பிரதிநிதி; என்னுடைய கட் டளைப்படிதான் நீங்கள் நடக்க வேண் டும்" என்கிறார்களே!— அந்தக் கட்டளை யில் ஏழை பொன்னையாவுக்கு எல்லோ ருக்கும் மத்தியில் வாழ இடமுண்டா?

நாடு நகரங்களில் எத்தனையோ மாட மாளிகைகள், கூட கோபுரங்கள்! மேல் ஜாதியைச் சேர்ந்த எத்தனையோ பேர் அவற்றில் ஒண்டிக் குடித்தனம் செய் கின்றனர். அவர்களுடன் நாய் கூடச் சரிசமானமாக வாழ்ந்து வருகிறது! — ஆனால், பொன்னையா? அவன் தான் கீழ் ஜாதியாச்சே! மரணமடைந்த பின் மயானத் தில் கூட அவனுக்குத் தனி இடந்தானே?

★

"சின்னி! எனக்கொரு யோசனை தோணுது: எங்கே யாச்சும் ஒண்டிக் குடித்தனம் இருக்கலாம்னு பார்க் கிறேன்!"

"நல்ல யோசனைதான்! நமக்கு யார் வீடு விடுவாங்க?"

"நம்ம ஜில்லா போர்டுக் குத் தலைவரா யிருக்காரே தர்மலிங்கம் பிள்ளை, அவர் எப்பப் பார்த்தாலும் எங்கக்

# காட்டில் கச்சேரி

சந்துரு

காட்டில் ஒருநாள் சங்கீத சபை வைப்பதைப் பற்றி மிருகங்களுக்குள் பேச்சு நடந்தது. கூட்டத்துக்கு டைகர், குயில், மயில், கரடி, ஓட்டைச் சிவிங்கி, முயல் மற்றும் பல மிருகங்கள் வந்திருந்தன. தலைமை வகித்த டைகர் கச்சேரியை எந்த இடத்தில் நடத்துவது என்று மற்ற மிருகங்களைப் பார்த்துக் கேட்டது. அதற்கு காண்டாமிருகம் "ஒரு தனி மண்டபம் இருந்தால்தான் டிக்கட் வசூல் செய்வதற்குச் சௌகரியமாயிருக்கும்" என்று கூறியது.

"மண்டபம் கட்ட அதிகச் செலவு ஆகும். ஆகையால், வெறும் ஓலைத் தட்டி மட்டும் கட்டிக் கூரையில்லாமல் செய்து விடலாம்" என்று ஒரு முயலும் காகமும் கூறின.

"ஓஹோ! நீங்கள் கூரை கட்டவேண்டாம் என்று சொல்லும் காரணம் எனக்குத் தெரியும். கச்சேரி நடத்தும்போது மரத்தின் மேல் ஏறிக் கொண்டு கவனிக்கலாம் என்ற யோசனையோ?" என்று கேட்டது ஓட்டைச் சிவிங்கி.



"ஆமாம், ஆமாம்! அதற்குத்தான் இந்த முயலும் காகமும் தந்திரம் செய்கின்றன" என்று சபை அங்கத்தினர்களான மற்ற மிருகங்கள் கூறின. முயல் பக்கமும் சில மிருகங்கள் சேர்ந்துகொண்டு சபைக்கு விரோதமாக வேலை செய்யத் தொடங்கின. இதனால் கூட்டத்தில் கலவரம் ஏற்பட்டு முயல், காகம், குயில், குரங்கு மயில் எல்லாம் வெளியேறின.

எப்படியும் சங்கீத சபையை ஆரம்பித்து கச்சேரிகள் நடத்தியே தீருவது என்று கரடி, ஓட்டைச்சிவிங்கி, டைகர் முதலிய முக்கிய மிருகங்கள் தீர்மானம் நிறைவேற்றின. கூட்டத்தில் சண்டை போட்டுக் கொண்டு வெளியேறிய மற்ற மிருகங்கள் டைகர் ஆரம்பிக்கும் சபைக்கு இடைஞ்சல் செய்வது என்று தீர்மானித்தன.

டைகர் தலைமையில் ஆரம்பமான சபையில் முதல் முதலாக என்றைக்குக் கச்சேரி நடத்துவது, யார் யார் பாடுவது, யார் யார் பரத நாட்டியம் ஆடுவது என்ற விஷயத்தைப் பற்றி எல்லாமாகச் சேர்ந்து முடிவு செய்தன. ஏற்கெனவே, அந்தக் காட்டில் பரத நாட்டியத்தில் மிகப் பிரசித்தி பெற்றிருந்த ஸ்ரீமதி கரடிதேவி சபையின் அபிவிருத்திக்காக உதவிக் கச்சேரி செய்வதாக ஒப்புக் கொண்டது. பரதநாட்டியக் கச்சேரி முடிந்ததும் ஸ்ரீ சிவிங்கி பாகவதர் கச்சேரி செய்வதாக ஒப்புக் கொண்டார். உதவிக் கச்சேரி செய்ய ஒப்புக் கொண்ட கரடிதேவிக்கும் சிவிங்கி பாகவதருக்கும் மேற்படி சபையின் சார்பாகத் தான் ஒரு பட்டம் கொடுக்கப் போவதாக 'டைகர்' ஒப்புக் கொண்டார்.

இப்படிப் பாடகருக்குப் பட்டம் கொடுக்கும் சிரமத்திற்கு ஈடாகத் தமக்கும் ஒரு பட்டம் கொடுத்துக் கொள்வதற்கும் அவர் முன்னதாகவே ஏற்பாடு செய்து கொண்டார்.

முதல் நாள் ஆரம்ப விழாக் கச்சேரிக்குத் தரை டிக்கட் இரண்டு ரூபாய் என்றும் 'மர' டிக்கட் ஐந்து ரூபா யென்றும் தீர்மானிக்கப்பட்டது. அத்துடன் கூட்டத்தில் கலாட்டா செய்த முயலைக் கச்சேரிக்குள் அனுமதிப்பதில்லை என்றும் ஒரு கண்டனத் தீர்மானம் நிறைவேறியது.

இதைக் கேள்வியுற்ற முயலுக்கு ஆத்திரம் தாங்கவில்லை. எப்படியாவது சபைக்குள் போய்ச் சேர்வதே சரி என்று தீர்மானித்தது. தன்னுடைய தோழர் மிருகங்களுடன் கூடி சபைக்குள் எப்படி நுழையலாம் என்பதைப் பற்றிச் சதியாலோசனை செய்தது. கழுதை மகா புத்திசாலிக் கழுதையாகையால் முயலுக்கு ஒரு யோசனை சொல்லிக் கொடுத்தது.

அந்த யோசனைப்படி முயலைத் தவிர்த்து அதனுடைய மற்ற தோழர்களெல்லாம் டிக்கட் வாங்கிக் கொண்டு சபைக்குள் போய்ச் சாதுவாக உட்கார்ந்து கொண்டிருந்தன. 'கேட்'டிலிருந்த மிருகங்கள் முயல் வந்தால் விடக் கூடாது என்று சொல்லிக் கொண்டு உஷாராகக் காவல் பார்த்தன.

கச்சேரி ஆரம்பமாகி கரடி நாட்டியம் நடந்து கொண்டிருந்தது. கரடி திவ்யமாக நாட்டியம் ஆடிற்று. அதன் அபிநயக் கச்சேரியைப் பார்த்து 'பேஷ்! பேஷ்!' என்று மிருகங்கள் ஆரவாரித்துக் கரகோஷம் செய்தன. ஆனால், கழுதை, நரி, முதலிய முயலின் தோழர்களுக்கு மாத்திரம் கச்சேரியில் கவனம் செல்லவே யில்லை. தங்களுடைய முன்னேற்பாட்டின்படி ஆகாய மூலமாய் எதையோ எதிர் பார்த்துக் கொண்டிருந்தன.

அவைகள் எதிர் பார்த்தபடியே ஆகாய மார்க்கமாய்ச் சபைக்குள் ஒரு காற்றாடி பறந்து வந்தது. உடனே நரி, கழுதை எல்லாம் அந்தக் காற்றாடியைப் பற்றி இழுத்தன. இழுக்க இழுக்க நூல் வந்து கொண்டே யிருந்தது. இந்த கலாட்டாவில் கச்சேரி சிறிது நேரம் தடைப்பட்டது. கடைசியில் நீளமான நூல் பூராவையும் இழுத்து முடியும் சமயம் அந்தக் காற்றாடியைச் சபைக்கு வெளிப்புறம் விட்டுக் கொண்டிருந்த முயலும் இவைகள் இழுத்த வேகத்தில் தொப்பென்று



சபைக்குள் வந்து விழுந்தது. இதைக் கண்டு மற்ற மிருகங்கள் சீறின.

அவை முயலைப் பார்த்துக் கோபத்துடன், "நீ எப்படி உள்ளே வரலாம். டிக்கட் உன்னிடம் இருக்கிறதா?" என்று சண்டைக்கு வந்து விட்டன.



"உங்கள் பிரமாதக் கச்சேரிக்கு நான் தான் வந்தேனுக்கும்? நான்பாட்டில் ஆனந்தமாகப் பட்டம் விட்டுக் கொண்டிருந்தேன். உள்ளே விழுந்த பட்டத்தைப் பிடித்து இழுத்து நீங்கள் அல்லவா என்னை உள்ளே தள்ளினீர்கள்? என்னை என்னமாக நீங்கள் அப்படி இழுக்கலாம்?" என்று முயல் பொய்க் கோபத்துடன் சண்டைக்கு வந்து விட்டது. சபையில் அவ்வாறு முயலை இழுத்தவர்கள் யார் என்பது அந்தக் குழப்பத்தில் தெரியவில்லை. இந்த யுக்தி செய்த கழுதையும் நரியும் கண்ணைச் சிமிட்டிக் கொண்டு ஒன்றையொன்று பார்த்துச் சிரித்துக் கொண்டன.

சபைத் தலைவர் கடைசியில் முயலைச் சமாதானம் செய்து வைத்துக் கச்சேரி கேட்க அதை அனுமதித்தார்.

எல்லாமாகத் தலைக்கு ஒரு ஆசனத்தில் வீற்றுக் கச்சேரியை ரஸித்தன. கச்சேரி முடிந்து தலைவர் பேசும்போது "சங்கீத சபை நடத்துவதென்றால் லேசில்லை. இப்படித்தான் ஆரம்பத்தில் விரோதிகள் தோன்றுவார்கள். அதை யெல்லாம் நாம் பொருட்படுத்தக்கூடாது" என்று கூறி முடித்தார். அந்த முடிவுரைக்கு முயல் கோஷ்டிகள் உள்பட எல்லா மிருகங்களும் கரகோஷம் செய்தன!

# காலக்ஷேபம்

### அர்த்த மாற்றம்

**எஜமானி** :—பரவாயில்லை ; நீ வேலைக்கு வந்ததற்கு இப்போ ஒன்றும் பெருக்கிறே ?

**வேலைக்காரி** :—என்னம்மா, எல்லாரும் நான் ரொம்ப இளைச்சுட்டதாய் சொல்றாங்க. நீங்க......

—தா. கி.

★

### பழக்க தோஷம் !

**ராணுவ உத்தியோகஸ்தர்** (ஹவில்தாரைப் பார்த்து) :—ஏன் உயரமான சிப்பாய்களை முந்தியும் குள்ளமான சிப்பாய்களைப் பிந்தியும் நிறுத்தி வைத்திருக்கிறாய் ?

**பக்கத்திலிருந்த சிப்பாய்** :—எங்க ஹவில்தார் மிலிடரியில் சேருமுன் பழக்கடை வைத்திருந்தார்.

—எஸ். கோமதி.

★

### இதோ செக் !

**மாஜிஸ்டிரேட்** :—நீ அவருக்குக் கொடுக்க வேண்டிய பணத்திற்கு செல்லாத செக் ஒன்றைக் கொடுத்த குற்றம் ருஜுவான தால் உனக்கு இருநூறு ரூபாய் அபராதம் விதித்திருக்கிறேன்.

**கைதி** :—யாரிடம் கட்ட வேண்டும் சொல்லுங்கள் ; உடனே ஒரு செக் எழுதிக் கொடுக்கிறேன் !

—“ஜோஹரி”

★

### இன்னும் தவணையா ?

**சேலை வியாபாரி** :—என்னம்மா ! நான் சேலை கொடுத்து ஐந்துமாத மாகிறதே ; இன்னும் பணம் கொடுக்காமல் இருக்கிறீர்களே ?

**சுகு** :—நீர் என்ன சொல்லிக் கொடுத்தீர். சாயம் போனால் பணம் வேண்டாம் என்று தானே சொன்னீர். சாயம் போய்விட்டதா இல்லையா என்று இன்னும் பார்த்துக் கொண்டிருக்கிறேன்.

—அ. ஏழுமலை.

### பிழைக்கும் வழி !

**நாதஸ்வர வித்வான்** (பக்தர் ஒருவரைப் பார்த்து) :—நீங்கள் மிகவும் அநியாயம் செய்கிறீர்கள். கொடுக்கும் தங்கத்தில் பாதிக்கு மேல் சாப்பிட்டு விடுகிறீர்கள்.

**பக்தர்** :—ஆமாம் ; நாங்கள் பாதித் தங்கத்தையாவது பொடி வைத்து ஊதிக் காண்பிக்கிறோம். நீங்கள் உங்களுக்குக் கொடுக்கும் பணத்திற்கு பூராவும் அல்லவா ஊதி விடுகிறீர்கள் ?

—தே. வி. எஸ்.

★

### போஸ்டாபீஸில்

**குமாஸ்தா** (போஸ்ட்மாஸ்டர்) :—ஸார் ! நீங்கள் வெளியே செல்லும்போது அந்த முத்திரை அடிப்பவனைக் கொஞ்சம் கோபித்து விட்டுப் போங்கள்.

**போஸ்ட் மாஸ்டர்** :—ஏன்?

**குமாஸ்தா** :—அப்போது தான் அவன் கோபத்தில் முத்திரையைக் கார்டில் நன்றாகப் பதியும்படி அழுத்திக் குத்துகிறான் !

—ந. க.

★

### கண்ணைத் திறவும் !

**ஒருவர்** :—பாகவதரே ! ஏன் கண்ணை மூடிக்கொண்டு பாடுகிறீர்கள் ?

**பாகவதர்** :—எல்லாரும் எழுந்து செல்வதைக் காணச் சகியாமல்தான்.

**ஒருவர்** :—இனிமேல் நீங்கள் கண்ணைத் திறந்துகொண்டே பாடலாம். எல்லோரும் போய் விட்டார்கள் !

—ராஜா.

★

### நல்ல யோசனை

**டெலிபோன் ஆபரேடர்** :—ஐயா, டெலிபோன் சரியாக வேலை செய்யவில்லை ; பழுது பார்க்கவேண்டும்.

**மேனேஜர்** :— அப்படியானால் டெலிபோன் கம்பெனிக்கு இந்த விஷயத்தைப் போனில் சொல்லி விடு.

—ஆர். அபிராம் பாரதி.

★

### நல்ல காலம்

**உபாத்தியாயர்** :— ராமன் குடை பிடித்துக்கொண்டு போகிறான்—இது என்ன காலம் ?

**மாணவன்** :—மழை காலம் ஸார்!

—வி. எஸ். சுந்தரராஜன்.

பும் அவன் தொண்டையை அடைத்தது. பெண் ஓடோடியும் வந்தாள்.

"விசாலம்! விசாலம்! முப்பது வருஷமாய் ஜாடையில்லை எங்கேயோ இருக்கிறது என்று நினைத்துக் கொண்டிருந்தேனே? அது இந்த வீணைக்குள் அல்லவா இருக்கிறது?" என்றாள் பாகீரதியம்மாள். இதற்குப் பிறகு, சங்கரியும் ஓடி வந்தாள். எல்லோருமாக வில்லையையும் வீணையையும் மாறி மாறித் தொட்டுத் தொட்டுப் பார்த்துப் பரவசம் அடைந்தார்கள். நான் ஒன்றுமே புரியாமல் விழித்தேன்.

சிறிது நேரம் கழித்து, பரபரப்பு எல்லாம் அடங்கியதும், பாகீரதியம்மாள் என்னிடம் வந்து அந்த வில்லை மர்மத்தைத் தெரிவித்தாள்.

"அப்பா! இந்த வில்லைதான் என் பிறந்தகத்து ஸ்ரீதனத்தில் ஒன்று. இது வைரத்தால் செய்தது. எவ்வளவோ பணம் பெறுமென்று சொன்னார்கள். நான் புக்ககத்துக்கு வந்த இரண்டு வருஷங்களுக்கெல்லாம் எனக்குக் கஷ்ட காலம் வந்தது. இவர் தாறுமாறாய்ச் சொத்தை வீண் விரயம் செய்ய ஆரம்பித்தார். என் மாமியார், இந்த வில்லை ஒன்றாவது பத்திரமாய் இருக்கட்டும் என்று இதை எங்கேயோ ஒளித்துவைத்து விட்டார். அவர் மாரடைப்பால் திடீரென்று இறந்த போன போது, இந்த வைர வில்லையைப் பற்றி என்னிடம் கூறாமலே போய் விட்டார். இப்பொழுதுதான் விஷயம் புரிந்தது. எப்படியோ நல்ல சமயத்தில் வில்லை கிடைத்தது. சங்கரிக்கு எப்படிக் கல்யாணம் செய்யப் போகிறோம் என்று தெரியாமல் விழித்துக் கொண்டிருந்தோம். இதை விற்று அவள் கல்யாணத்தை முடித்து விடலாமல்லவா?" என்று கூறிப் பாகீரதியம்மாள் அர்த்தத்துடன் என்னைப் பார்த்தாள்.

நானு அதைப் புரிந்து கொள்ளாமல் இருப்பேன்? "பாட்டி! இதற்காக வில்லையை விற்பானேன்? வில்லையை ஸ்ரீதனமாகக் கொடுத்து விடுங்கள். கல்யாணத்தைச் சிக்கனமாக முடித்து விடுவதை நான் ஆட்சேபிக்கவில்லை" என்றேன். பாட்டி மகிழ்ச்சியுடன் என்னைப் பார்த்தாள்.

கல்யாணத்திற்குப் பிறகு, சங்கரியின் ஸ்ரீதனமான வைர வில்லையை நான் புருஷ தனமாகச் செய்து கொள்ளவில்லை. அதை அவள் தலையில் நானே சூட்டினேன்.



'திரிசங்கு சொர்க்கம்' என்ற சினிமாவுக்கு டிக்கட் வாங்கப் போனவர், தாமும் திரிசங்கு சொர்க்கத்தில் நிற்கிறார்!

இப்பொழுதெல்லாம், பள்ளிக்கூட உபாத்தியாயர் வேலை அரச பதவியாகவும், கீழ் மங்கலமே சொர்க்கமாகவும் தோன்றுகிறது. கூடத்தில் தூங்கிலிருக்கும் வீணை என்னைப் பயமுறுத்தவில்லை. அதன் அறுந்த தந்திகள் எனக்குத் திகிலைத் தரவில்லை. பாகீரதியம்மாளுக்கு ஆறுதலை அளிக்கும் அதே வீணை எனக்கும் அளவிலாத ஆனந்தத்தைக் கொடுத்துக் கொண்டிருக்கிறது. காரணம், சொல்லவும் வேண்டுமோ?

கோவில் குளம் இருந்தது. அதில் ஒரு வருக்கும் தெரியாமல் போட்டு விடலாமா? மனிதர்கள் நடமாட்டம் படித்துறையில் தெரிந்தது. ஆகவே, குளத்தை விட அருகிலிருந்த கற்றாழைத் தோட்டமே வீணையைப் போடுவதற்கு ஏற்ற இடம் என்று தோன்றியதால் அதை அங்கே கொண்டு போய்த் தூக்கி எறிந்து விட்டுத் திரும்பினேன். என் மனதிலுள்ள பளு அப்பொழுதுதான் நீங்கியது. அந்தக் கணத் தில் என் வாழ்வின் துயரம் பறந்தோடி இன்ப வெள்ளம் பாய்ந்து வந்து என்னை எங்கேயோ இழுத்துக்கொண்டு போவ தாகத் தோன்றியது. திரும்பி வரும்போது, ஒரு பட்சி பறப்பதைப்போல் ஆனந்தமாகத் திரும்பி வந்தேன்.

நான் பெட்டியில் வைத்திருந்த ரூபாய் முப்பதை எடுத்துக் கொண்டேன். "நான் அதை விற்று விட்டேன். இந்தாருங்கள் பணம்!" என்று பாகீரதியிடம் பணத்தைக் கொடுத்து ஒரு பொய்யும் சொன்னேன். அதை வாங்கிக் கொள்ளும்போது அவள் கைகள் நடுங்கின.

நாட்கள் சென்றன. வீணை மறைந்த துடன் என் கவலையும் மறைந்து விட்டதாக நினைத்தேன். அதுதான் இல்லை; ஏனெனில் வீணையைப் பற்றிய கவலை போய், பாகீரதி யைப் பற்றிய கவலை வந்தது. வீணை போன நாளிலிருந்து பாட்டியிடம் ஒரு திடீர் மாறு தலைப் பார்த்தேன். அவள் முகத்தில் களை இல்லாமல், சோகம் குடிகொண்டிருந்தது. உற்சாகமே இல்லை. இதைப் பார்த்ததும் என் மதியீனத்தை நானே நொந்தேன். அசட்டு நினைப்பு நினைத்துக்கொண்டு, பாகீ ரதி அம்மாள் உயிரினும் மேலாகக் கருதின ஞாபகச் சின்னத்தை எறிந்து விட்டு வந்தேனே! என் சுகத்தை நினைத்து தள்ளாத கிழவியைச் சோகத்தில் தள்ளி னேனே — என்று வருந்தினேன். ஆனால் இப்பொழுது ஒன்றும் குடிமுழுகிப் போய் விடவில்லை. முதலில் நினைத்தபடி, வீணையைக் குளத்தில் எறிந்து விடவில்லை. அது அந்தப் புதரில்தானே இருக்கும்? அதைத் திரும்பிக் கொண்டுவந்து பாட்டியிடம் கொடுத்து விட்டால் என்ன?

அன்று சாயங்காலம் நான் ஒருவரு மறியாமல் வீணையை எடுத்து வரப் புறப் பட்டேன். யாராவது அதைப் பார்த்து எடுத்துப் போயிருப்பார்களோ என்று பயம் எனக்கிருந்தது. நல்லவேளை; புதர் அருகில் சென்று தேடினேன். அகப்பட்டு விட்டது.

ஆனால், நான் விட்டெறிந்ததில் வீணையின் ஒரு பாகம் ஒடிந்து போயிருந்தது. அப் படியே அதை எடுத்துக்கொண்டு வீட்டுக்கு வந்தேன்.

"பாட்டி! இதோ உங்கள் வீணை. இதை விற்றதிலிருந்து நீங்கள் படும் கஷ்டம் எனக்குத் தெரியும். ஆகையால் திரும்பி வாங்கிக் கொண்டு வந்து விட்டேன். பணத்தை நீங்கள் இப்பொழுது கொடுக்க வேண்டிய அவசியம் இல்லை. நானே பணத்தை கடைக்காரருக்குத் திருப்பிக் கொடுத்து விட்டேன். நீங்கள் கொஞ்சம் கொஞ்சமாகக் கொடுக்கும்போது நான் வாங்கிக் கொள்கிறேன்" என்றேன். பாகீரதி அம்மாளின் கண்களிலிருந்து ஆனந்த பாஷ்பம் பொழிந்தது.

வீணையைக் கையில் வாங்கிக்கொள்ளும் போது, பாகீரதியம்மாள் மனத்தில் இத்தனை நாளாய்த் தேங்கியிருந்த துக்கம் பீறிட்டுக் கொண்டு வெளி வந்தது. மகத்தான விபத்தி லிருந்து உயிர் தப்பிய குழந்தையைத் தாய் வாரி அணைப்பதுபோல் கரை காணா ஆனந் தத்துடன் அந்த வீணையை அணைத்தாள். அதை இப்புறமும், அப்புறமும் திருப்பித் திருப்பிப் பார்த்து மகிழ்ந்தாள். அப்பொழுது 'கடக்,' 'கடக்' என்று சப்தம் வீணைக் குள்ளேயிருந்து வந்தது.

"இது என்ன சத்தம்? உள்ளே என்ன இருக்கிறது?" என்று ஆச்சரியத்துடன் கேட்டு, பாகீரதி அம்மாள் வீணையைக் குலுக் கினாள். அவ்வாறு குலுக்கியதும், ஏதோ ஒன்று பந்துபோல் உருண்டு கீழே விழுந் தது. 'என்ன இது?' என்று கேட்ட வாறு அதைக் கையிலெடுத்துப் பிரித்துப் பார்த்தாள். ஆச்சரியத்தால் நாங்கள் பிர மித்து விட்டோம். உள்ளேயிருந்தது ஒரு நடை வில்லை!

"விசாலம்! விசாலம்!" என்று கூவினாள் பாகீரதி அம் மாள். ஆச்சரியமும் பரபரப்



அவள் கடைக்கண் பார்வை செல்வதைப் பார்த்தேன். நாளடைவில், நான் சாப்பிடும்போது சங்கரி அவ்வப்பொழுது எனக்குப் பரிமாறவும் வந்தாள்.

அவள் தாயார் விசாலம் என்னிடம் பேசும்போது எதை உத்தேசித்து, சங்கரியின் புத்தி சாதுர்யத்தையும், பரீட்சைகளில் முதல் மார்க்குகள் வாங்குவதையும், சங்கீதத்தில் உள்ள புலமையையும் பற்றிப் பேசுகிறாள் என்பது எனக்குத் தெளிவாயிற்று. என் குடும்பத்தின் பூர்வோத்திரம், அந்தஸ்து முதலியவற்றை விசாரித்துவிட்டு, ஒரு நாள் என் ஜாதகத்தைக் கொடுக்க முடியுமா என்று கேட்டாள்.

இதைக் கேட்டதும் எனக்குத் திக்கென்றது. வீணையைப் பற்றிய என் கவலை இன்னும் அதிகமாயிற்று. எங்கள் வாழ்வில் ஏதோ மகத்தான சோக நாடகம் நடக்கப் போகிறது என்றும், அதில் துர்ப்பாக்கிய கதா பாத்திரமாக நான் ஆகிவிடப் போவதாகவும் ஊர்ஜிதமாயிற்று. எப்படியாவது உடைந்த வீணையைத் தொலைத்துத் தலைமுழுக நான் தீர்மானித்தேன்.

இந்தச் சமயத்தில் நல்ல வேளையாகப் பாகீரதி அம்மாளே பேச்சை ஆரம்பித்தாள். "அப்பா, ராஜா! இந்த எலிகள் அடிக்கிற கொட்டம் சகிக்கவில்லை. சங்கரியின் புடவையை நேற்று எலி கடித்துக் குதறியிருக்கிறது. தினமும் எலிகள் என்னைச் சுற்றிக் குதித்துப் பாடுகிறது எனக்குப் பிடிக்கவில்லை. ஏதாவது எலிப்பொறி ஒன்று வாங்கிக் கொண்டு வாயேன்! உனக்கு ரொம்பப் புண்ணியமுண்டு!" என்றாள். "எலிப்பொறிதான் ஏற்கெனவே ஒன்று வீட்டில் இருக்கிறதே!" என்று கூறி மூலையிலிருந்த வீணையைச் சுட்டிக் காண்பித்தேன். "இதற்குள்ளேதான் எல்லா எலியும் வாசம் செய்கின்றன. அதிலுள்ள துவாரத்தை மூடி வெளியில் கொண்டு போய் விட்டால் அப்புறம் எலியும் இருக்காது; பொறியும் வேண்டாம்!" என்றேன். வீணையை வெளியில் எறிந்துவிட வேண்டும் என்ற அபிப்பிராயத்தை நான் வேண்டுமென்றே சொல்லவில்லை.

"அந்த வீணைதான் இவர் வாசித்துக் கொண்டிருந்தது. எவ்வளவு பிரும்மானந்தமாய் வாசிப்பார் தெரியுமா? வீணை சேஷய்யர்தான் இவர் குரு. 'ஐயோ! இவர் மட்டும் கச்சேரி செய்ய ஆரம்பித்தால் வித்வான்கள் எல்லாம் கச்சேரி செய்வதை விட்டு ஓடிப்போய் விடுவார்கள்' என்று எல்லோரும் சொல்வார்கள். 'நான் கச்சேரி செய்வதற்காக வீணை கற்றுக் கொள்ளவில்லை. ஆத்ம திருப்திக்காகத்தான் கற்றுக் கொள்கிறேன் என்பார்!" என்று சொல்ல ஆரம்பித்தாள் பாகீரதி அம்மாள்.

இதுதான் சமயம் என்று நான், "அடாடா! இவ்வளவு நல்ல வீணை இப்படி வீணாய்த் தூங்குகிறதே! இது யாருக்காவது உபயோகப்படக் கூடாதா?" என்றேன். பாகீரதி வேதனையுடன் பெருமூச்செறிந்து விட்டு உள்ளே போய் விட்டாள்.

அன்று இரவு, நான் தனியாக உட்கார்ந்திருக்கும் போது, பாகீரதியம்மாள் மறுபடியும் வீணையைப் பற்றிப் பேச ஆரம்பித்தாள். மெதுவாக என் அருகில் வந்து ரகசியமாக, "அப்பா! ரொம்ப நாளாக உன்னைக் கேட்கவேண்டும் என்றிருந்தேன். ஆனால் மனம் வரவில்லை. இந்த வீணையை யாராவது விலைக்கு வாங்கிக் கொள்வார்களா? ஏதாவது பணம் கிடைக்குமா? ரூபாய் இருபதாவது கிடைத்தால் கொடுத்து விடலாம் என்று பார்க்கிறேன். குழந்தை சங்கரிக்கு ஒரு புடவையாவது வாங்கிக் கொடுத்தால் திருப்தியாயிருக்கும். ஆறு குழந்தையை வைத்துக் கொண்டு விசாலம் கஷ்டப்படுகிறாள். நான் நல்ல ஸ்திதியில் இருந்திருந்தால் வேண்டியது செய்வேன்; இப்போது ......" என்று சொல்லி வரும்போது அவள் குரல் கம்மிற்று.

வறுமையும், பேத்தியின் மேலுள்ள வாஞ்சையுமல்லவா, இந்த விலையில்லாப் பொக்கிஷத்தை விற்கத் தூண்டுகிறது என்பதை உணர்ந்தபோது எனக்குப் பாட்டியின் பேரில் மிகவும் இரக்கம் ஏற்பட்டது. அந்த வீணைக்கு யாரும் காலணாகூடக் கொடுக்க மாட்டார்கள் என்பதும் எனக்குத் தெரியும். ஆனால், அதை எப்படியாவது தொலைத்தால் போதும் என்று நினைத்த நான், சட்டென்று "இருபது ரூபாயல்ல; முப்பது ரூபாய்கூடக் கொடுப்பார்கள். பக்கத்துக் கிராமத்தில் ரசிகன் ஆசாமி ஒருவர் குடியிருக்கிறார். அவர் பெண்ணுக்கு வீணை சொல்லிக் கொடுக்க ஆசைப்படுகிறார். அவரிடம் விற்று விடலாம்" என்றேன். "அப்படியானால் கொடுத்துவிடேன்!" என்றாள் பாகீரதி.

அப்பொழுதே வீணையை எடுத்துக் கொண்டு வேகமாக வெளியே கிளம்பினேன். அதை என்ன செய்வது? எங்கே எறிவது? ஊருக்குக் கிழக்கே பிள்ளையார்



வீணை வாசிப்பாள். இரண்டு வருஷங்களுக்கு முன், அவள் சின்னஞ் சிறு கைக் குழந்தையைவிட்டு விட்டு மாயமாய் மறைந்தாள். அவள் போன பிறகு சங்கீதம், வீணை, — எதைக் கண்டாலும் எங்களுக்கு வெறுப்பு ஏற்பட்டதில் ஆச்சரியமென்ன?

இதனாலேயே அந்த உடைந்த வீணை - மூளியான வீணை - நான் சாப்பிடும் போதெல்லாம் எதிரில் இருந்து கொண்டு எனக்கு நரக வேதனை கொடுத்தது. அதைப் பார்க்கும் போது, என் உடம்பு வெல வெலத்தது. அதை அப்பொழுதே எடுத்து நாக் கொண்டு போய் எறிந்து விடலாமா என்று என் உள்ளம் துடி துடித்தது.

"தூக்கை நினைத்து மருந்தைச் சாப்பிடாதே!" என்ற கதையாக, நான் மறக்க எத்தனித்த அந்த வீணை இரவும் பகலும் என் மனதில் தோன்றலாயிற்று. அந்த வீணையை எப்படியாவது அந்த வீட்டிலிருந்து அகற்றிவிட வேண்டும் என்று நான் நிர்மானித்தேன்.

இந்தச் சந்தர்ப்பத்தில்தான் பாட்டியின் பெண் விசாலமும், அவள் பெத்தி சங்கரியும் கிராமத்துக்கு வந்தார்கள்.

ஒரு நாள் நான் உள்ளே சாப்பிட்டுக் கொண்டு இருக்கும் போது, வாசலில் ஒற்றை மாட்டு வண்டி வந்து நிற்கும் சத்தம் கேட்டது. மறு நிமிஷம் கையில் கூஜாவுடன் உள்ளே வந்தாள் விசாலம். இதற்குப் பிறகு, சின்னப் பெட்டியும் கையுமாய் உள்ளே வந்த சங்கரி என்னைப் பார்த்து மிரண்டு நின்றுவிட்டாள். "வா, அம்மா! உள்ளே!" என்று பார்வதி கூப்பிட்டவுடன் அவள் முகம் வெட்கத் தலை கவிழ்ந்து சமையற்கட்டுக்குள் ஓடிய காட்சி இப்பொழுதும் என் மனதை விட்டகலவில்லை.

பார்வதியம்மாளே ஆச்சரியமான பிறவி தான்; அவள் பெத்தியோ அதைவிட ஆச்சரியமாயிருந்தாள். ஏனெனில் முதல் சந்திப்பின்போது நான் பார்க்க முடிந்த சங்கரியை அதற்குப் பிறகு சரியாகப் பார்க்கவே முடியவில்லை. நான் வீட்டுக்கு வரும்போது எங்கேயோ அவள் ஓடி ஒளிந்து கொள்வாள். சாப்பிட உள்ளே செல்லும் போது அடுப்பங்கரையை விட்டு அவள் வெளியே வருவதில்லை.

"இது சுத்த அசட்டுப் பெண்ணாக இருக்கும் போலிருக்கிறதே! எட்டு வகுப்பு வரையில் படித்த பெண்ணுக்கு இவ்வளவு லஜ்ஜையும் கூச்சமும் எதற்கு?" என்று வியந்தேன்.

சங்கரி வந்ததிலிருந்து வீணையைப் பற்றிய என் ஞாபகம் மாறுமோ என்று பார்த்தேன். இல்லை; அதற்கு மாறாக என் கிலி இன்னும் அதிகமாக என்னை வதைக்கலாயிற்று. என் பயத்தைப் பார்த்து நேயர்கள் பரிகாசம் செய்யலாம். என்னை மூடநம்பிக்கை யுள்ளவன் என்று நினைக்கலாம். ஆனால், சங்கரி வந்ததற்கும், வீணைக்கும் ஏதோ சம்பந்தம் இருப்பதாக எனக்குத் தோன்றிற்று. வீணை உடைவதும், விளக்கு அணைவதும் துர்ச்சகுனங்கள் என்றும், சோகத்திற்கு அறிகுறி யென்றும் நாம் எவ்வளவோ கதைகளில் படித்திருக்கிறோமல்லவா? ஆகவே, அந்தப் பெண்ணின் வாழ்வில் மகத்தான சோகம் ஏற்படப் போகிறதென்று என் மனம் எச்சரித்துக் கொண்டேயிருந்தது.

சங்கரி வந்து பத்து நாளாயிற்று. இத்தனை நாள் இருக்குமிடம் தெரியாமல் இருந்தவளல்லவா? இப்பொழுது, அவளது மெட்டிச் சத்தம் அக்கக்கே தோன்றி மறைந்ததைக் கேட்டேன். சாயங்கால வேளைகளில் அவள் பிள்ளையார் கோவிலுக்குப் போகும்போது என் அறையின் பக்கம்

என் சந்தோஷத்திற்கு இன்னும் சில காரணங்கள் இருந்தன.

சாதாரணமாகப் பாட்டிகள் ஓயாமல் ஏதாவது தொண தொணப்பார்கள். கதை சொல்ல ஆரம்பித்து நம் வேலையைக் கெடுத்து விடுவார்கள். ஆனால் பாகீரதி அம்மாளோ, இதற்கெல்லாம் மாறாயிருந்ததை நினைக்க நினைக்க எனக்கு ரொம்பவும் சந்தோஷமாயிருந்தது. அனாவசியமான ஒரு வார்த்தைகூடப் பேசுவது கிடையாது. அவளுண்டு, அவள் காரியம் உண்டு.

இதனால், பாட்டியைப் பற்றி சில விஷயங்களைத் தெரிந்து கொள்வதில் எனக்கு ஆவல் உண்டாயிற்று. "இந்தப் பாட்டி தன்னந் தனியாகக் கிராமத்தில் இருப்பானேன்? சொந்தக்காரர்கள் யாருமே இல்லையா?" என்று தெரிந்து கொள்ள ஆவல் கொண்டேன். நான் விசாரித்த பிறகு பாகீரதி அம்மாள் பின்வரும் விவரங்களைத் தெரிவித்தாள். பாட்டிக்கு ஒரே பிள்ளையும் பெண்ணும். பல அசௌகரியங்களையும் பொருட்படுத்தாமல் பிள்ளையை மெட்ரிகுலேஷன் வரையில் படிக்க வைத்தாள். பெண்ணுக்கு கௌரவமான இடத்தில் கல்யாணம் ஆயிற்று. பையனுக்கும் கல்கத்தாவில் நல்ல வேலை கிடைத்தது. ஆனால் கஷ்டம் யாரை விட்டது? பையன் மாதம் 300 ரூபாய் சம்பாதித்துக் கொண்டிருந்தவன் திடீரென்று இறந்து போனான். அதிலிருந்து பாட்டிக்கு உலகம் வெறுத்து விட்டது. பெண் பட்டணத்தில் இருக்கிறாள். பெண் வயிற்றுக் குழந்தைகள் ஆறு பேர்கள் இருக்கிறார்கள். அவர்களைப் பார்க்க வருஷத்திலொரு தடவை பாட்டி பட்டணத்திற்குப் போவாள். ஆனால் அவளுக்கு அங்கே இருப்புக் கொள்ளாது. ஒரு மாதம் இருந்து விட்டு ஊருக்குத் திரும்புவாள். கீழமங்கலம் தான் பாட்டிக்குச் சொர்க்கம்.

மேற்கொண்டு சில விவரங்களை அக்கம் பக்கத்தில் விசாரித்துத் தெரிந்து கொண்டேன். பாட்டியின் குடும்பம் தலைமுறை தலைமுறையாய் மிகவும் கௌரவமாக இருந்த குடும்பம். நிறைகட்டி பெருவாழ்வு வாழ்ந்த குடும்பம். ஆனால் திடீரென்று அதற்குத் துரதிருஷ்டம் வந்து சேர்ந்தது.

பாட்டியின் புருஷர் வாலிபப் பிராயத்தில் சகவாச தோஷத்தின் காரணமாகப் பொருளை இழந்தார். கிராமத்தில் பாதி அவருக்கிருந்த சொத்துக் கொஞ்சம் கொஞ்சமாகத் தேய்பிறைபோல் தேய்ந்தது. இதே ஏக்கத்தில் அவர் காலகதியடைந்த பிறகு, கடன்காரர்கள் ஒரு ஏகரா நிலத்தைப் பாகீரதிக்குக் கொடுப்பதாகச் சொன்னார்கள். "எனக்கு யாரும் பிச்சை கொடுக்க வேண்டாம்!" என்று சொல்லி விட்டாள் பாட்டி. அவள் புத்திர சோகத்தால் பீடிக்கப் பட்டபோது, மாப்பிள்ளை பட்டணத்தில் வந்து இருக்கச் சொல்லிக் கெஞ்சியும் அவள் சுய கௌரவம் அப்படிச் செய்ய இடம் கொடுக்கவில்லை. இதைக் கேட்டதும், ஏற்கனவே பாகீரதி அம்மாளிடம் எனக்கிருந்த அன்புடன் சொல்ல முடியாத பச்சாத்தாபமும் பயபக்தியும் உண்டாயின.

நான் பாட்டியுடன் பேசும்போது அவள் துக்கத்தை ஞாபகப்படுத்தும் எதையும் சொல்வதற்குக் கூசுவேன்.

ஆனால், அந்த வீட்டுக்கு வந்திருந்ததிலிருந்து பாகீரதி அம்மாளிடம் பேசவேண்டிய ஒரே ஒரு விஷயம் இருந்தது. ஆனால் அதைப் பேசுவதற்கு எனக்குத் துணிவு வரவில்லை. ஏனெனில் அவள் அதைக் கேட்டால் என்ன நினைத்துக் கொள்வாளோ, அதனால் அவளுக்குப் பழைய துயர ஞாபகங்கள் வருமோ என்ற பயந்தான்.

அந்த வீட்டில் கூடத்தில் உட்கார்ந்து நான் சாப்பிடும் போதெல்லாம் அவ்விஷயம் என் மனதை வாட்ட ஆரம்பித்தது. நான் கேட்க நினைத்தது, கூடத்தில் ஒரு ஓரத்தில் வைத்திருந்த பழைய வீணையைப் பற்றித்தான். வெகு நாளாக மூலையில் சாத்தியிருந்த அந்த வீணையைச் சுற்றி ஒட்டடை படிந்திருந்தது; சிலந்திகள் கூடு கட்டியிருந்தன. வீணையின் தந்திகள் அறுந்து கிடந்தன. சில பாகங்கள் பெயர்ந்தும் ஒடிந்தும் போயிருந்தன. அந்த வீணையைப் பார்க்கும்போதெல்லாம் என்னை அறியாமல் மனம் வேதனைப் பட்டது.



இதற்குக் காரணம், அந்த உடைந்த வீணையைப் பார்க்கும்போது, எங்களை மோசம் செய்து விட்டுச் சென்ற கனகவல்லியின் நினைவு வந்தது தான் — அவள் தான் என் தங்கை. எவ்வளவோ அழகாக

# ஞாபகச் சின்னம்

**வஸந்தன்**

அன்று எனக்குத் தபாலில் வந்த கடிதத்தைப் பார்த்ததும் தூக்கி வாரிப் போட்டது. மயக்கம் வருவதுபோலிருந்தது. பள்ளிக்கூட உபாத்தியாயரைப் பார்த்து யாரும் பச்சாதாபப் படுகிறதில்லையாகையால் என்னை நானே தேற்றிக் கொண்டேன்.

என் கலக்கத்துக்குக் காரணம், ஜில்லா போர்டார் என்மீது கருணை வைத்துத் தண்ணீர் இல்லாத பொட்டல் காட்டுக்கு என்னை மாற்றி யிருந்ததுதான். எப்படி அந்த ஊரில் போய் உயிருடன் இருக்கப் போகிறோம் என்று நான் மனம் கலங்கினேன். கடைசியில் ஒருவாறு மனதைச் சமாதானப் படுத்திக்கொண்டு கீழ் மங்கலம் என்ற அந்தக் கிராமத்துக்குப் போனேன்.

அங்கே போனதும், எனக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. நான் கேள்விப் பட்டதைவிட நிலைமை அங்கே மோசமாயிருந்தது. ஒவ்வொரு வினாடியிலும் ஜலத்திற்காகச் சண்டை நடந்துகொண்டிருந்ததைப் பார்த்தேன். இந்த சமயத்தில் தான், அந்த ஊரிலிருந்து மாற்றலாகிப் போகும் பழைய உபாத்தியாயர் அபயம் கொடுத்தார். 'ஐயா, கவலைப்படாதீர்! இங்கே ஒரு பாட்டியம்மாள் இருக்கிறாள். அந்த அம்மாள் இருக்கும் வரை இந்த ஊருக்கு வரும் எந்த உபாத்தியாயருக்கும் சாப்பாட்டுக் கவலை கிடையாது" என்று கூறி என்னைப் பாட்டியம்மாள் வீட்டுக்கு அழைத்துக் கொண்டு போனார்.

"பாட்டி! நான் மாற்றலாகிப் போகிறேன் என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தீர்களே, இதோ பாருங்கள்! எனக்குப் பதிலாக வந்திருக்கும் வாத்தியார்!" என்று சொல்லி என்னைப் பாட்டிக்கு அறிமுகப் படுத்தி வைத்தார்.

பாகீரதி அம்மாளின் வீட்டு வாசல் திண்ணையை ஒட்டிய சிறிய அறையை நான் வாடகைக்கு எடுத்துக் கொண்டேன். பள்ளிக்கூடத்திலும் எனக்கு அதிக வேலை கிடையாது. அங்கே இருபது பையன்கள் தான் இருந்தார்கள். ஆனால், அந்த ஊரில் பொழுதைப் போக்குவது எனக்குச் சிரமமாகவே இல்லை. எனக்குக் கிடைத்த அவகாசத்தைக் கதைகள் எழுதிப் பத்திரிகைகளுக்கு அனுப்புவதிலும், நிராகரிக்கப்பட்ட கதைகளைப் படித்து, ஆசிரியர்களின் அசட்டுத்தனத்திற்கு இரங்குவதிலுமாகக் கழித்தேன்.

ஆரம்பத்திலிருந்தே, பாகீரதியம்மாளுக்கு என் மேல் இருந்த அபிமானத்தை அவள் அடிக்கடி பிரண்டைத் துவையல் செய்து போட்டு, 'அப்பா! இது உடம்புக்கு நல்லது! சாப்பிடு!' என்று உபசாரம் செய்வதிலிருந்தே அறிந்து கொண்டிருந்தேன்.



காமு:—விளையாடுவதற்குச் சாமானே இல்லையே? என்ன விளையாட்டு விளையாடறது?

ராமு:—அதற்கென்ன, கடைக்காரன் விளையாட்டு விளையாடினால் போச்சு!

"உடனே உயிர் பெற்று எழுவார்கள்" என்று யக்ஷன் வரம் தந்தான்.

மானாகவும் யக்ஷனாகவும் வந்தது தரும தேவதையே. தன் மகனை யுதிஷ்டிரனை நேரில் பார்த்து அவன் குணாதிசயத்தைச் சோதித்து மகிழ்ச்சி யடைவதற்காக வந்த தரும தேவன் யுதிஷ்டிரனைத் தழுவிக்கொண்டு ஆசீர்வதித்தான்.

* * *

பாண்டவர்கள் வனவாசத்தின் கஷ்டங்களை யெல்லாம் பொறுத்தார்கள். அருச்சுனன், தகப்பனான இந்திரனிடமிருந்து அஸ்திரங்கள் அடைந்து திரும்பினான்.

பீமனும் அண்ணன் மாருதியை சௌகந்தித் தடாகத்தண்டை சந்தித்து அவரைக் கட்டி யணைந்து பன்மடங்கு பலம் பெற்றுவிட்டான்.

யக்ஷப் பொய்கையண்டை யுதிஷ்டிரன் தன்னுடைய பிதாவான சாக்ஷாத் தரும தேவதையால் ஆலிங்கனம் செய்யப்பட்டுத் தகப்பனுக்குத் தகுந்த புத்திரனாக விளங்கினான்.

"பன்னிரண்டு வருஷ வனவாசம் முடிவதற்கு இன்னும் வெகு சில நாட்களே இருக்கின்றன. இனி பதின்மூன்றாவது வருஷத்தில் செய்து கழிக்க வேண்டிய மறைவுப் பிரதிக்ஞையும் சரியாகவே பூர்த்தியாகும். உன்னையும் உன் தம்பிமார்களையும் பகைவர்கள் யாரும் கண்டுபிடிக்க முடியாமல் உங்கள் தவத்தை வெற்றிகரமாகவே முடிப்பீர்கள்" என்று தருமதேவதை யுதிஷ்டிரனுக்கு வரம்தந்து மறைந்தான்.

* * *

"தருமபுத்திரன் தன் பிதாவைத் தரிசித்த இந்தப் புண்ணிய கதையைக் கேட்டவர்களுடைய மனமானது எந்தக் காலத்திலும் அதர்மத்தில் செல்லாது. மித்திர பேதத்திலும் பிறர் பொருளைக் கவர்வதிலும் பிரவேசிக்காது. தனக்கு உரிமை யில்லாத ஸ்திரீயையாவது புருஷனையாவது கண்டு மயங்க மாட்டார்கள். அற்பப் பொருள்களில் பற்றுதல் கொள்ள மாட்டார்கள்" என்று இந்த யக்ஷ-யுதிஷ்டிரப் பிரச்னோத்தரக் கதையைப் பற்றி ஜனமேஜய ராஜாவுக்கு வைசம்பாயனர் சொன்னபடியே குற்றம் குறையுடன் சுருக்கமாகத் தமிழில் நான் எழுதியிருப்பதை அன்புடன் படித்த மக்களும் மகளிரும் அதே நற்பயனைப் பெறுவார்களாக!



## சங்கீத சிகரம்

"காலைத் தூக்கி நின்றாடும் தெய்வமே!" என்னும் யதுகுல காம்போதி கீர்த்தனம் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியினால் பாடப்பட்டு, ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ் கம்பெனியாரால், நெ. 18234 இசைத்தட்டாக வெளியிடப்பட்டிருக்கிறது.

இசைத்தட்டு, எமக்குக் கிடைத்து இரண்டு மாதம் ஆகிவிட்டது. ஆனாலும், பத்திரிகையில் இட நெருக்கடி காரணமாக எழுதுவதைத் தள்ளிப் போட்டுக்கொண்டே இருந்தேன்.

நேற்று ஒரு தடவை இசைத் தட்டைக் கேட்ட போது, இதன் விமரிசனத்துக்கு அதிக இடமே தேவையில்லை யென்றும், சொல்ல வேண்டியதைச் சில வாக்கியங்களிலே சொல்லி விடலாமென்றும் தீர்மானித்தேன். அந்தச் சில வாக்கியங்கள் இவைதான் :—

1. தமிழ் சாஹித்யங்களுக்குள்ளே இதைப் போன்ற சொல் அழகும், பொருள் அழகும், உணர்ச்சிச் சிறப்பும் அமைந்த சாஹித்யம் வேறு கிடையாது.

2. கர்நாடக சங்கீதத்திலே இதைக் காட்டிலும் சிறந்த ராக பாவம் அமைந்த கீர்த்தனம் வேறு கிடையாது.

3. ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி இதுவரையில் கொடுத்திருக்கும் இசைத்தட்டுகளுக்குள்ளே இவ்வளவு அழகாகக் குரல் இனிமையும், ரஸபாவமும், ராகக் களையும் பொருந்திச் சங்கீத சிகரமாய் அமைந்த இசைத் தட்டு வேறு கிடையாது.

இந்த அபூர்வமான இசைத் தட்டைக் குறித்து இதற்கு மேல் சொல்ல வேண்டியதும் ஒன்றும் கிடையாது. —"கர்நாடகம்"

"கவலை."

"தேசாந்தரம் போகிறவனுக்கு யார் தோழன்?"

"வித்தை."

"வீட்டில் இருப்பவனுக்கு யார் தோழன்?"

"மனைவி."

"சாகப்போகிற கிழவனுக்கு யார் நண்பன்?"

"தானம். அதுதான் மரணத்தின்பின் தனியாகச் செல்லும் உயிரின் கூடப் போகும்."

"பாத்திரங்களுக்குள் எது பெரியது?"

"எல்லாவற்றையும் தனக்குள் அடக்கக் கூடிய பெரிய பாத்திரம் பூமி" என்றான் யுதிஷ்டிரன்.

"எது சுகம்?" என்றான் யக்ஷன்.

"சுகம் நல்லொழுக்கத்திலே தான் நிலைபெறுகிறது" என்றான் தருமபுத்திரன்.

"எதை விட்டுப் பிரிந்தால் மனிதன் எல்லாருக்கும் பிரியனாகிறான்?"

"தன்னைப் பற்றிய கர்வத்தை விட்டால் மனிதன் மற்றவர்களுக்குப் பிரியமானவனாகிறான்" என்றான் யுதிஷ்டிரன்.

"எதை இழந்து விடுவதில் துயரம் இல்லை?"

"கோபத்தை விட்டால் துயரம் உண்டாகாது" என்றான் தருமபுத்திரன்.

"எதை இழந்தால் மனிதன் தனவான் ஆகிறான்?"

"ஆசையை விட்டால் மனிதன் சம்பத்து அடைகிறான்."

"பிராமண்யமானது குலத்தினாலா? ஒழுக்கத்தினாலா? படிப்பினாலா? நிச்சயமாகச் சொல்லு" என்றான் யக்ஷன்.



"குலமும் படிப்பும் பிராமண்யத்திற்குக் காரணம் அல்ல; ஒழுக்கமே காரணம். ஒழுக்கத்தில் குறைபட்டவன் பிராமணன் ஆகமாட்டான். எவ்வளவு படித்தவன் ஆனாலும் கெட்ட வழக்கங்களில் சிக்கினவன் பிராமணன் ஆக மாட்டான். நான்கு வேதங்களை ஓதியிருந்தாலும் கெட்ட நடத்தையுள்ளவன் இழிகுலத்தவனாவான்" என்றான் யுதிஷ்டிரன்.

"உலகத்தில் எது பெரிய ஆச்சரியம்?"

"நாள்தோறும் பிராணிகள் யமன் வீட்டுக்குப் போய்க்கொண்டே இருப்பதைப் பார்த்தும் மிஞ்சி உள்ள மனிதர்கள் தாம் நிலையாக இருக்க வேண்டுமென்று விரும்புகிறார்கள். இதுவே பெரிய ஆச்சரியம்."

இவ்வாறு இன்னும் பல கேள்விகள் யக்ஷன் கேட்டான். எல்லா வினாக்களுக்கும் யுதிஷ்டிரன் விடை கொடுத்தான்.

முடிவில் யக்ஷன், "அரசனே! இறந்த சகோதரர்களில் ஒருவன் பிழைக்கக் கூடும். நீ எவனை விரும்புகிறாயோ, அவன் பிழைப்பான்" என்றான்.

யுதிஷ்டிரன் ஒரு கணம் யோசித்தான். பிறகு, "சியாமள நிறமும் தாமரைக் கண்களும் அகன்ற மார்பும் நீண்ட கைகளும் கொண்டு ஆச்சா மரம்போல் வீழ்ந்து கிடக்கும் நகுலன் உயிரோடு எழுந்திருக்கட்டும்" என்றான்.

அப்போது யக்ஷன் யுதிஷ்டிரனுக்குப் பிரசன்னமாகி, "பதினாயிரம் யானைகளுக்குச் சமமான பலம் படைத்த பீமனை விட்டுவிட்டு ஏன் நகுலனுடைய உயிரைக் கேட்டாய்? பீமசேனன் உனக்கு ரொம்பப் பிரியம் என்றல்லவோ எல்லாரும் சொல்லுகிறார்கள்? அர்ச்சுனனுடைய சாமர்த்திய மல்லவோ உங்களுடைய பாதுகாப்பு? அவ்விருவரையும் விட்டுவிட்டு ஏன் நகுலன் பிழைத்தெழுந்திருக்க விரும்பினாய்?" என்று யக்ஷன் கேட்டான்.

"யக்ஷனே! தருமமே மனிதனைப் பாதுகாக்கிறது. பீமனுமல்ல, அர்ச்சுனனுமல்ல. புறக்கணிக்கப்பட்டால் தருமமே மனிதனைக் கொல்லுகிறது. என் பிதாவுக்குக் குந்தியும் மாத்ரியும் இரு மனைவிகள். நான் குந்திக்கு ஒரு புத்திரன் மிஞ்சினேன். மாத்ரி புத்திரனும் ஒருவன் உயிருடன் இருந்தால் சமமாக இருக்கும். நகுலன் பிழைத்து எழுந்திருக்கட்டும்" என்றான்.

"பட்சபாத மறியாத என் மகனே! உன்னுடைய எல்லாத் தம்பிமார்களும்

# யக்ஷன் கேள்விகள்

## சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

ஜனசஞ்சாரமில்லாததும் புள்ளிமான்களும் பன்றிகளும் பறவைகளும் நிறைந்திருந்ததுமான சுக்கப் பொய்கை வனத்தண்டை தருமபுத்திரன் போனான். அழகான பச்சைப் புல். அதன்மேல் நான்கு இந்திரர்களைப் போல் சகோதரர்கள் நால்வரும் வீழ்ந்து கிடப்பதைக் கண்டு ஆச்சரியமும் துக்கமும் அடைந்தான். சோகத்தைத் தாங்க முடியாமல் கண்ணீர் விட்டான்.

"அப்பா! பீமனே! உன் சபதம் எல்லாம் வீணாயிற்றே! வனவாசம் முடியப் போகும் சமயத்தில் இறந்து விட்டாயே! தெய்வங்கள் சொன்ன வாக்கெல்லாம் பொய்யாகி விட்டதே" என்று உயிரற்று வீழ்ந்து கிடக்கும் பீமனையும் அருச்சுனனையும் தழுவிப் புலம்பினான்.

"எந்தப் பகைவன் உங்களை வரையும் கொல்லும் சாமர்த்தியம் படைத்தான்!" என்று மீண்டும் மீண்டும் சகோதரர்களைப் பார்த்துக் குழந்தை போல் அழுதான். "உயிரற்றுக் கிடக்கும் இந்த நகுல சகதேவர்களைப் பார்த்தும் என்னுடைய இதயம் வெடிக்காமலிருக்கிறதே! அது நிச்சயமாக எஃகினால் ஆக்கப்பட்டதாக இருக்க வேண்டும்" என்று தன்னைத் தானே நொந்து கொண்டான்.

பிறகு நன்றாகக் கவனித்துப் பார்த்து, "இது ஏதோ மாயமாகத் தோன்றுகிறது. இவர்களுடைய உடல்களில் காயம் ஏதும் இல்லை. உறங்குகிறவர்கள் போல் முகத்தில் எவ்வித மாறுபாடும் இல்லாமல் கிடக்கிறார்கள். விரோதிகளுடைய காலடிகள்கூட மண்ணில் காணப்படவில்லை. இது துரியோதனனுடைய சதியாகவே இருக்கலாம். ஜலத்தில் விஷம் கலந்திருக்கலாம்" என்று தனக்குத்தான் சொல்லிக் கொண்டே தாகத்தினால் ஏவப்பட்டுக் குளத்தில் இறங்கினான். உடனே அசரீரி பேச ஆரம்பித்தது:

"உன் தம்பிகள் என் பேச்சைக் கேளாமல் தண்ணீர் அருந்தினார்கள். அவ்வாறு நீயும் செய்யாதே. என் வினாக்களுக்கு விடை கொடுத்துவிட்டுப் பிறகு பொய்கையில் இறங்கித் தாகம் தீர்த்துக் கொள். இது என்னுடைய வசத்தில் இருக்கிற குளம்" என்றது.

* * *

யுதிஷ்டிரன் இது யாரோ யக்ஷன் வாக்கு என்று தெரிந்து கொண்டு அசரீரியினுடைய பேச்சுக்கு இணங்கி, "கேள்விகளைக் கேள்" என்றான். ஒன்றன்பின் ஒன்றாக அசரீரி பல கேள்விகளைக் கேட்டது.

"எவன் தினமும் ஆதித்யனை உதிக்கச் செய்கிறான்?" என்றது அசரீரி.

"பிரம்மம்" என்றான் யுதிஷ்டிரன்.

"மனிதன் எதனால் எப்போதும் துணையுள்ளவனாகிறான்?" என்றான் யக்ஷன்.

"தைரியமே மனிதனுக்குத் துணைவன்" என்றான் யுதிஷ்டிரன்.

"எந்த சாஸ்திரம் படித்து மனிதன் புத்திமான் ஆகிறான்?"

"எந்த சாஸ்திரம் படித்துமல்ல; பெரியோர்களை அடுத்தலால் மனிதன் புத்திமான் ஆகிறான்" என்றான் தருமபுத்திரன்.

"பூமியைக் காட்டிலும் கனமானது எது?" என்றான் யக்ஷன்.

"மக்களைத் தாங்கும் தாய் பூமியைக் காட்டிலும் கனமானவள்" என்றான் யுதிஷ்டிரன்.

"ஆகாயத்தைக் காட்டிலும் உயர்ந்தது எது?"

"பிதா."

"காற்றைக் காட்டிலும் விசை கொண்டது எது?"

"மனம்" என்றான் யுதிஷ்டிரன்.

"புல்லிலும் அற்பமானது எது?"

தது. சுரதத்துடன் விருவிருப்பும் சேர்ந்து சுத்த சாவேரி, வஸந்தா, அடாணு முதலிய ராகங்கள் வெளிவந்தன. கரஹரப்ரியா மிகவும் நன்றாயிருந்தது.

29உ சென்னையில் ஆர். எஸ். ஸ்ரீநிவாசன் கனத்த குரலில் நல்ல ஞான பாவத்துடன் காம்போதியைப் படிப்படியாக சஞ்சாரங்களை அமைத்துப் பாடியது கவனத்தை யிழுத்தது.

30உ திருச்சியில் கே. வி. சுப்ரமணியமும், சீர்காழி கே. சதாசிவம் பிள்ளையும் முதல் ஸ்தானத்துக்குப் போட்டியிட்டனர். இருவருக்கும் நயமான சாரீரம், நல்ல உதவுபடி. முன்னவர் விருவிருப்பும் அழகுப் பாணியும் கொண்டு கரஹரப்ரியா, மத்யமாவதி ராகங்களைச் சக்கைபோடு போட்டார். பின்னையவர்கள் ஹரிகாம்போதி, முகாரி, பைரவி, ஹிந்தோளம் என்ற ராகங்களை ஒரு கை பார்த்தார். அத்துடன் விலாஸினி என்ற அபூர்வ ராகமும் கேட்டது. அதில் ஒரு பல்லவியையும் விளாசினார். வேக காலத்தில் தெளிவாய் ஸ்வரம் பாடியது விசேஷம். முகாரிக்கு அடுத்தாற்போல் பைரவியை எடுத்துக் கொண்டிருக்க வேண்டாம்.

டிஸம்பர் 1உ நிறைந்த நாளா யிருந்தது. அன்று திருச்சியிலும் சென்னையிலும் நடந்த கச்சேரிகள் பெரும்பாலும் உயர்ந்த ரகமா யிருந்ததுதான் விசேஷம். திருச்சியில் டி. கே. ரங்கநாதன் காலையிலும் பிற்பகலிலும் பாடியதில் கானடா, தன்யாசி ஆகிய சாதாரண ராகங்களோடு உதய ரவிச்சந்திரிகா, வராளி, சுரத விஜேஹினி என்ற அசாதாரண வகைகளையும் திறமையாய்ச் சமாளித்தது குறிப்பிடத் தக்கது.

அன்று சென்னையில் இரவு 9-30 மணிக்கு 3-வது நிற்றலை ஒலி பரப்பில், வி. குடாமணியின் ஸங்கீதம் ஜம்மென்று காதை நிரப்பியது. அவருக்கும் ஹம்ஸாநந்தி ராகத்துக்கும் ரொம்பப் பிடித்தம் போலும். இனிமையும் கனிப்பும் கொண்ட குரலில், அழகுப் பிடிகளும், நீண்ட கார்வைகளும் கொடுத்து, தோடியை வெகு விமரிசையாய்ப் பாடினார். 'மாயே', 'பிபரே ராம ரஸம்' என்ற உருப்படிகள் ஜோரா யிருந்தன.

2உ சென்னையில் நடந்த டொக்கா ஸ்ரீ ராமமூர்த்தியின் கச்சேரி குறிப்பிடத் தக்கது. கனத்த சாரீரம். கமலா மனோஹரி, சங்கராபரணம், தோடி ராகங்கள் நல் வடிவங்களா யிருந்தன. கார்வைகள் வளைவு குழைவுகளுக்கும் குறைவில்லை. சாரீரத்தில் கொஞ்சம் கனம் நயம் சாதகம் செய்து கொள்வாரானால் இவர் பாட்டு மேம்படும்.

3உ திருச்சியில் கேட்ட கே. கல்பகத்தின் பாட்டே. சிறப்பாயிருந்தது. குரல் இனிமையும், சரளமான உதவுபடியும், பிர்க்காப் பொழிவும் தென்பட்டன. பந்துவராளி, மோஹனம், பேகடா ராகங்கள் எளிய நடையில் இலங்கின. 'அப்பராம பக்தி'யில் நிரவல், ஸ்வரம் ஜிலுஜிலுப்பா யிருந்தன.

4உ திருச்சியில் எம். கே. தியாகராஜ பாகவதரின் பெரிய கச்சேரி. 1½ மணி நேரம் கலகலத்த சங்கீதத்தால் காதை நிரப்பினார். காம்போதியில் வேலைப்பாடு முழுவதையும் காட்டினார். பெரும்பாலும் மேல் ஸ்தாயியிலேயே சஞ்சாரம். மேல் காந்தாரம், மத்யமம், பஞ்சமங்களில் சளையாது, நீண்ட கார்வைகளுடன் நின்று நிலைத்துக் கற்பனைகளை அள்ளி விட்டார். முகாரி உருப்படியில் 'மாதா பிதா' என்ற இடத்தில் கண்ட நிரவல் ஸ்வரங்களும், 'ஆடிய பாதம்' என்ற உருப்படியில் விழுந்த சங்கதிகளின் லாகவமும் மனதைக் கவர்ந்தன. இறுதியில் ராகங்களின் பெயர்கள் அமைந்த 'கல்யாண குண மஹிமனே' என்ற ராகமாலிகையையும் உருக்கமாய் வழங்கினார்.

## அர்ச்சுனன் சோகம்

இந்தியாவின் பூர்விக வீரர்களுக்குள்ளே அர்ச்சுனனைப் போல் பாரத மக்களின் மனதைக் கவர்ந்த வீரன் வேறு இல்லை. அப்பேர்ப்பட்ட வீரனுக்கும், கண்ணனுடைய ஸகோதரி ஸுபத்திரைக்கும் பிறந்த அருமைக் குமாரன் அபிமன்யு, பாரத யுத்தத்தில் இறந்து விடுகிறான். அந்தப் பயங்கரமான புத்திர சோகத்திலிருந்து பார்த்தனை மீட்பதற்காக ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா என்னவெல்லாமோ தந்திரம் செய்ய வேண்டி வந்தது.

நமது "கல்கி" பத்திரிகையின் ஆரம்பம் முதல் வெகு திறமையாக மாய்ந்து வேலை செய்து கொண்டு வரும் ஸ்ரீ வெங்கடாசல முதலியாரின் புத்திர சோகத்திற்கு மேற்படி அபிமன்யுவின் உதாரணத்தைத்தான் நாம் எடுத்துக் காட்ட வேண்டி யிருக்கிறது. அவருடைய அருமைப் புதல்வன் ஸ்ரீ நடராஜன் இருபது வயதுக் காளைப் பருவம் வரையில் வளர்ந்து, பச்சையப்பன் கலாசாலையில் இண்டர்மீடியட் வகுப்பில் வாசித்துக் கொண்டிருந்தான். சமீபத்தில் கல்யாணமும் ஆயிற்று. கலாசாலையில் படிக்கிறோம் என்கிற நேரத்திலும் தகப்பனாருடைய தொழிலை மறந்து விடாமல் தீபாவளி மலர் முதலான முக்கிய சந்தர்ப்பங்களில் தானும் வந்திருந்து மாய்ந்து வேலை செய்து கொண்டிருந்தான். அப்படிப்பட்ட அருமையான செல்வப் பிள்ளையைச் சென்ற வாரத்தில் இரக்கமற்ற கொடிய கூற்றுவன் கொண்டு போய் விட்டான்! அர்ச்சுனனுக்கும் கண்ணனுக்குமே காலனிடமிருந்து அபிமன்யுவைத் தப்புவிக்க முடியவில்லை யென்பதைத்தான் ஸ்ரீ வெங்கடாசல முதலியாருக்கு நாம் ஞாபகப் படுத்த வேண்டியவர்களாகிறோம். வேறு என்ன சொல்வதற்கு இருக்கிறது?

# வான சஞ்சாரம்

இராசக் கோன்

**21**-ல் காலை ரேடியோவைத் திறந்ததும் சென்னை நிலையத்திலிருந்து கேட்ட கே. கோமதியின் கானம் காதை நிரப்பியது. மாலையிலும் பாடினார். மத்யமாவதி, சங்கராபரண ராகங்கள் அழகிய சஞ்சாரங்களுடன் சிறந்து விளங்கின. 'பாலின்சு,' 'சரோஜதள நேத்ரி' கிருதிகளில் நிரவல், ஸ்வரங்கள் ஜோரா யிருந்தன.

அன்று இரவு சென்னையில் நடந்த எஸ். சோமசுந்தரத்தின் முழுக் கச்சேரி பூரிப்பா யிருந்தது. சாரீரம் சற்று விரிந்ததாயினும் நயமும் கூறுதி சுத்தமும் கொண்டது. சாதகமோ அசாத்யம். ராமப்ரியா, தோடி, பிலஹரிக் ராகங்களின் ஆலாபனையோடு அவைகளில் எடுத்துக் கொண்ட உருப்படிகளும் நல்ல பாணியுடன் விளங்கின. அத்துடன் 'நீ்கொண்ட' என்ற விருத்தத்தை, ஐந்து ராகங்களாலான மாலிகையாய் அமைத்துப் பாடியது சிறப்பா யிருந்தது. வேக கால வேலைப்பாடுகளில் சுகம் சற்று குறைவாய்த் தென்பட்டது.

22-ல் திருச்சியில் சாவித்ரி கணேசன், மெல்லிய குரலில் காம்போதி, ஹிம்மேந்திர மத்யமம், கல்யாணி ராகங்களையும், சென்னையில் தாசந்த லக்ஷ்மீ நாகராஜன், கனத்த குரலில் கானமூர்த்தி, அடாணா, வனஸ்பதி, கீரவாணி ராகங்களையும் பாடியது கவனிக்கத் தக்கதா யிருந்தது.

அன்றிரவு சென்னையில் கே. எஸ். ராமநாராயணய்யர் கல கலத்த சாரீரத்தில் காமவர்த்தினியை ராகம், தானம், பல்லவிக்காக எடுத்துக்கொண்டு அழுத்தமாயும் விரு விருப்பாயும் கச்சேரி செய்தார். முன் சொன்னது போல, இத்தகைய ராகம் - பல்லவி புரோகிராமின் முழுப் பலனும் கிடைக்க வேண்டுமானால் அதற்குக் கொடுக்கப்படும் நேரத்தைக் கொஞ்சம் அதிகப்படுத்த வேண்டும்.

24-ல் கச்சேரிகளில் சென்னையில் காலையிலும் பிற்பகலிலும் கேட்ட என். ராஜலக்ஷ்மியின் குரல் இனிமையும், கடுத்தர காத்திரமும் கொண்டது. அனாயாசமான மேல் ஸ்தாயி சஞ்சாரம். மொத்தத்தில் நிதானம், அழகான பாணி. விஜயநாகரி, பிலஹரி, ஹிம்மேந்திர மத்யமம் காமவர்த்தினி, கல்யாணி என்று ராகங்களைப் பொழிந்தார். உருப்படிகளும் சுசிதமாயிருந்தன.

26-ல் சென்னையில், கனிப்பான சாரீரத்தில் நல்ல பிருகவும் அழகு பிடிகளும் கொண்டு, கே. எஸ். மகாதேவன் ஒரு மணி நேரம் பாடியது சென்ற வாரக் கச்சேரிகளுக்குச் சிகரமாய் விளங்கியது. தோடியும், கரஹரப்ரியாவும் விஸ்தாரமாயிருந்தன. 'ஸாமஜ ஸாப' கிருதியில் கண்ட நிரவல் பலே ஜோர். ஜோதிஸ்வரூபிணியில் 'கானமுதபானம்' என்ற உருப்படி சற்று அபூர்வமாகவே தென்பட்டது. எல்லாவற்றையும் விட சுத்த ரிஷபம், சுத்த காந்தாரம் சேர்ந்து வரும் 7-வது சக்கரம் 39-வது மேளகர்த்தாவான ஜாலவராளி ராகத்தையும், அதில் 'அனுராக' என்ற உருப்படியையும் மிகத் தெளிவாயும் அழகாயும் பாடியதுதான் அதிக அபூர்வம்.

அன்று திருச்சியில் பாடிய திருவையாறு டி. வைத்தியநாதய்யருக்குச் சன்ன சாரீரமாயினும், ஞானபாவமும் நிதானமும் கொண்டு கரஹரப்ரியா, சாரங்கா, யதுகுல காம்போதி, சுத்தசாவேரி, பைரவி என்ற ராகங்களைச் சரமாரியாய்ப் பொழிந்தார். போதாக் குறைக்கு இறுதியில் ஒரு ராக மாலிகையையும் சேர்த்துக் கொண்டார்.

27-க் கச்சேரிகளில் சென்னையில் கேட்ட நீலம்மா கடம்பியின் வீணையுடன் கலந்த பாட்டு சிறந்து விளங்கியது. திவ்ய சாரீரம், அனாயாசமான ஸ்தாயி சஞ்சாரம், நிதானம், அழகு பிடிகள், நீண்ட கார்வைகள். 'வாதாபி கணபதிம்' உருப்படியில் நிரவல் ஸ்வரங்களை ஒருபோடு போட்டு விட்டு, காமவர்த்தனி, சங்கராபரணம், ஆபேரி, மத்யமாவதி ராகங்களில் தன் கைவரிசை முழுவதையும் காட்டினார். அவருடைய வாய்ப்பாட்டு அமர்க்களத்தில் வீணா நாதம் பின்னணியில் தானிருந்தது.

28-ல் சென்னை நிலையத்தில் பாடிய கே. வி. நாராயணசாமிக்குக் கட்டை சாரீரமாயினும் சாதகத்தினால் நயப்படுத்திக் கொண்டிருக்கிறார். அமீர் கல்யாணி, தோடி, யதுகுலகாம்போதி, சௌராஷ்டிர ராகங்களை நிதானமாயும் அழுத்தமாயும் வழங்கினார். 'ஏமிஜேஸிதே' கிருதியில் நிரவலும் ஸ்வரமும் சுகமாயிருந்தன.

அன்று திருச்சி நிகழ்ச்சிகளில் கே. சுந்தரராமய்யரின் வேணுகானம் சிறப்பா யிருந்

பெருமானிடம் விடை பெற்றுக் கொண்டு கமலியின் வீட்டுக்குக் கிளம்பினோம். அப்போது நாவுக்கரசர் என் தந்தையைப் பின்னால் நிறுத்திச் சில வார்த்தைகள் மெல்லிய குரலில் கூறினார். அவற்றை நான் கேட்க விரும்பவில்லை. யானாலும் என் காதிலும் இரண்டொரு வார்த்தைகள் விழுந்தன......"

"அப்படி என்ன உன் காதில் விழுந்தது, சிவகாமி! நாவுக்கரசர் ஏதாவது சொல்லியிருந்தால் நல்ல வார்த்தையாகத்தான் சொல்லியிருப்பார். இந்த ஊரிலேகூட உன்னுடைய நடனத் திறமையைக் குறித்துப் பாராட்டிப் பேசியிருக்கிறாரே!"

"சுவாமிகள் கூறியதை அப்போது நான் அதிகமாகப் பொருட்படுத்தவில்லை. என் மனமெல்லாம் அப்போது தங்களிடம் இருந்தது. உடனே மறந்தும் விட்டேன். ஆனால் அப்புறம் ஒரு நாள் என் தந்தை நாகநந்தி பிக்ஷுவிடம் அதைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்ததைக் கேட்டேன். 'உங்கள் பெண் மகா பாக்கியசாலி; உலகத்தில் இல்லாத தெய்விகக் கலை அவளிடம் இருக்கிறது. ஆனால் அவளைப் பார்க்கும்போது ஏனோ என் மனதில் துயரம் உண்டாகிறது. ஏதோ ஒரு பெரிய அபாயம் அவளுக்கு வரப் போவதாகத் தோன்றுகிறது! ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள்!' என்று நாவுக்கரசர் கூறினாராம். அதைக் கேட்டதிலிருந்து ......"

"அந்த மகா புருஷர் கூறியது உண்மைதான், சிவகாமி! உனக்குத்தான் பெரிய அபாயம் வந்ததே! இந்த வெள்ளத்தைக் காட்டிலும் பெரிய அபாயம் வேறு என்ன வர முடியும்? கடவுள் அருளால், அதிலிருந்து தப்பி விட்டாய்!...இனிமேல் ஒன்றும் வராது!" என்று மாமல்லர் உறுதியான குரலில் கூறினார்.

"நானும் அப்படித்தான் இரண்டு மூன்று தினங்களாக அடிக்கடி நினைத்துக் கொள்கிறேன். ஆனாலும் ஏனோ மனதில் உறுதி ஏற்படவில்லை. நாவுக்கரசர் பெருமான் கூறிய விபத்து இதுவல்லவெனத் தோன்றுகிறது. பிரபு! தங்களை என்னுடன் சேர்த்து வைத்து மூன்று தினங்கள் நான் சொர்க்கத்தில் இருக்கும்படி செய்த வெள்ளத்தை விபத்து என்று எப்படிச் சொல்வேன்? ஆகையினால்தான், இன்னும் வேறு ஏதோ இருக்கிறது என்று எண்ணமிடுகிறேன். ஆனால், இனிமேல் என்ன விபத்து வந்தால் என்ன? எது நடந்தால்தான் என்ன? தங்களுடைய விசால இருதயத்தின் ஒரு மூலையில் எனக்கு ஒரு பத்திரமான இடம் இருக்கிறது என்ற நம்பிக்கையே எனக்கு உற்சாகம் ஊட்டி வரும். தாங்கள் யுத்தத்தையெல்லாம் முடித்து விட்டு, தங்கள் தந்தையிடம் அநுமதி பெற்று என்னை அழைத்துப் போக வரும் வரையில் நான் இவ்விடத்திலேயே மன நிம்மதியுடன் இருப்பேன். தங்களுடைய அன்பாகிய கவசம் என்னைக் காப்பாற்றும்போது, என்ன விபத்து என்னை என்ன செய்து விடும்?"

"மண்டபப் பட்டு அவ்வளவு பாக்கியம் செய்திருக்கிறதா, சிவகாமி! இங்கேயே தங்கி விடுவதென்று தீர்மானம் செய்து விட்டாயா?" என்று மாமல்லர் கேட்டார். அதுதான் அவருடைய விருப்பம் என்று குரலிலிருந்தே தெரிந்தது.

"ஆம், பிரபு! வேறு எந்த இடத்திலும் நான் மன நிம்மதியுடன் இருக்க முடியாது. இந்தக் கிராமத்துக் கோயிலும், இந்தப் பாறைகளும், வராக நதியும் எனக்குப் பல இன்ப நினைவுகளை ஊட்டிக் கொண்டிருக்கும். என் தந்தையும் இந்தப் பாறைகளைக் கோயில்களாக அமைப்பதில் பெரும் ஆவல் கொண்டிருக்கிறார். அவரும் நிம்மதியாக இருப்பார். ஆனால் ஒரே ஒரு விஷயந்தான் கொஞ்சம் மனக் கவலை உண்டாக்குகிறது. அந்த நாகநந்தி இங்கேயும் வந்து தொலையாமலிருக்கவேண்டும்!" என்றாள் சிவகாமி.

"நாகநந்தி இங்கே வரமாட்டார்; அந்தக் கவலை உனக்கு வேண்டாம்!" என்றார் மாமல்லர். குண்டோதரனிடம் நாகநந்தியைப் பற்றித் தெரிந்து கொண்டிருந்ததினால்தான் அவர் அவ்விதம் உறுதியாய்க் கூறினார்.

அதே சமயத்தில் அவர்கள் பேசிக் கொண்டிருந்த பாறைக்குப் பின்னால் ஒளிந்து கேட்டுக் கொண்டிருந்த ஒரு புத்த பிக்ஷுவின் உருவம் மெதுவாக எழுந்து அப்பால் சென்றது.



என்னத்திற்கு?' என்றெல்லாம் இனிமேல் சொல்லாதீர்கள். அவ்விதம் தாங்கள் சொன்னால், இந்தப் பாவியின் காரணமாகத்தானே இப்படித் தாங்கள் சொல்கிறீர்கள் என்று எண்ணிப் பிராணத் தியாகம் செய்து கொள்வேன்!''

''சிவகாமி! கையில் கல்லுளி பிடித்து வேலை செய்யும் சிற்பியின் இரத்தம் மட்டும் உன் உடம்பில் ஓடவில்லை. பழந் தமிழ் நாட்டு வீரத் தாய்மார்களின் இரத்தமும் ஓடுகிறது. மணக்கோலம் பூண்ட மணவாளனைப் போர்க் களத்துக்கு மனமுவந்து அனுப்பிய வீரத் தமிழ் மங்கையின் இரும்பு நெஞ்சம் உன்னிடமும் இருக்கிறது. உண்மையில் வீர பத்தினியாவதற்குரியவள் நீதான்! போர்க்களத்துக்கு என்னோடு நீ வரவேண்டியதில்லை. ரத சாரத்தியமும் செய்ய வேண்டியதில்லை. ஆனால், இனி நான் எப்போது போர்க்களம் சென்றாலும், என்னுடைய நெஞ்சில் நீ இருந்து கொண்டிருப்பாய். சற்று முன் நீ கூறிய வீர மொழிகள் என் செவியிலே ஒலித்துக் கொண்டிருக்கும். உன்னுடைய காதலின் நினைவு எனக்கு இணையற்ற வீரத்தையும் துணிவையும் ஊட்டிக் கொண்டிருக்கும்.....''

''பிரபு! வீர பல்லவ வம்சத்தில் பிறந்து, பதினெட்டு வயதிற்குள் தென்னாட்டிலுள்ள மல்லர்களையெல்லாம் வென்று மகாமல்லர் என்று பெயர் பெற்ற தங்களுக்கு இந்த ஏழைப் பெண்ணின் நினைவுதானா தீரமும் துணிச்சலும் ஊட்ட வேண்டும்? புள்ளலூர் யுத்தத்திலே தாங்கள் எதிரிகளைச் சின்னா பின்னம் செய்து உலகமே ஆச்சரியப்படும்படியான வெற்றி கொண்டது இந்த ஏழைப் பெண்ணின் ஞாபகத்தினால்தானா?...... கேவலம் ஒரு எட்டுக் கால் பூச்சியைக் கண்டு கதி கலங்குபவள் நான்! தங்களுக்கு ஞாபகமிருக்கிறதா? நமது குழந்தைப் பிராயத்தில் ஒரு நாள் நீங்களும் நானும் என் தந்தையின் சிலைகளுக்குப் பின்னால் ஓடிப் பிடித்து விளையாடிக் கொண்டிருந்தபோது, ஒரு பெரிய கறப்பான் பூச்சியைப் பார்த்து, 'ஓ' என்று அலறி விட்டேன். நீங்கள் ஒளிந்து கொண்டிருந்த இடத்திலிருந்து ஓடிவந்து என்னைக் கட்டி அணைத்துத் தேறுதல் கூறினீர்கள். 'என்ன?' 'என்ன?' என்று கேட்டீர்கள். நான் முதலில் சொல்வதற்கு வெட்கப்பட்டு அப்புறம் உண்மையைச் சொன்னேன். தாங்கள் நம்பவே இல்லை. 'கறப்பான் பூச்சிக்குப் பயப்படவாவது? பொய்! என்னை ஒளிந்து கொண்டிருந்த இடத்திலிருந்து வெளியே வரச் சொல்வதற்காகவே நீ இப்படிப் பாசாங்கு செய்தாய்!' என்றீர்கள். நிஜமாக நான் அப்போது பயப்படத்தான் செய்தேன். சற்று முன்னால் இங்கே பாம்பைக் கண்ட போதும் எனக்கு உண்மையில் பயமாய்த்தான் இருந்தது......பாருங்கள், இப்போதுகூட என் உடம்பு நடுங்குவதை!''

மாமல்லர் மீண்டும் முன்போல் சிவகாமியைத் தனது வலிய புஜங்களினால் சேர்த்து அணைத்துக் கொண்டு, ''இதென்ன அசட்டுத்தனம், சிவகாமி! ஏன் இப்படி நடுங்குகிறாய்?'' என்று கேட்டார்.

''ஏனோ தெரியவில்லை. சில காலமாக எனக்கு அடிக்கடி இம்மாதிரி பயம் உண்டாகிறது. ஏதோ ஒரு பெரிய அபாயம், — இன்னதென்று தெரியாத விபத்து—என்னைத் தேடி வந்து கொண்டிருப்பதாகத் தோன்றுகிறது. சுவாமி! தங்களிடம் ஒரு இரகசியம் சொல்லுகிறேன். என் தந்தையிடம்கூட அதை நீங்கள் சொல்லக் கூடாது......''

''சொல்லு, சிவகாமி!''

''காஞ்சியில் திருநாவுக்கரசர் மடத்திலே நான் மூர்ச்சை அடைந்து விழுந்த அன்று, எனக்குப் பிரக்ஞை வந்ததும் தாங்கள் நயன பாஷையில் விடைபெற்றுக் கொண்டு போய் விட்டீர்கள். சற்று நேரம் கழித்து, நானும் என் தந்தையும் வாகீசப்



தங்களுடைய அன்புக்கு உரிமை பூண்டவன் என்னும் எண்ணந்தான் அந்த ஆனந்த பரவசத்துக்கு ஆதாரமாயிருந்தது. திருநாவுக்கரசர் பெருமானின் இனிய தீந்தமிழ்ப் பாடல்களைப் பாடிக்கொண்டு நான் அபிநயம் பிடிக்கும்போது, தங்களுடைய திருவுருவந்தான் என் அகக்கண் முன்னால் நிற்கிறது. பிரபு! தங்களால் கிடைத்த இந்தக் கலைச் செல்வத்தை வேறொருவருக்கு உரிமையாக்க எனக்குப் பாத்தியதையில்லை. நடனக் கலை தெய்வக் கலையாயிருக்கட்டும், தெய்வத்துக்கும் எட்டாத கலையாகவேயிருக்கட்டும், தங்களைக் காட்டிலும் அது எனக்கு உயர்ந்ததல்ல. தாங்கள் வாய் திறந்து ஒரு வார்த்தை சொன்னால் போதும்; புருவத்தை உயர்த்தி ஒரு ஜாடை காட்டினாலும் போதும்; உடனே அந்த நடனக் கலையை இந்த நதிப் பிரவாகத்திலே விட்டுவிட்டு ஒரு முழுக்கும் போட்டு விடுகிறேன்......"

மடல் விரிந்த மாதுளை மொட்டுப் போன்ற சிவகாமியின் செவ்விதழ்களை மாமல்லர் தமது அகன்ற கரத்தினால் மூடினார். "சிவகாமி! நீ இப்படியெல்லாம் சொல்லச் சொல்ல, என் தர்ம சங்கடந்தான் அதிகமாகிறது. எனக்கு நீ அகத்தியம் வேண்டும்; ஆனால் இந்தத் தெய்விகக் கலையை நீ விட்டுவிடுவதும் பிடிக்கவில்லை. ஒரு நாள் நீ இந்தக் கலையை விட்டு விடத்தான் வேண்டியிருக்கும் என்று எண்ணும்போது எனக்குப் பகீர் என்கிறது. பல்லவ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தினி அரங்க மேடையில் நின்று நடனமாடுவது என்பது நினைக்க முடியாத காரியம் அல்லவா? அதை எண்ணும்போதுதான், உண்மையிலேயே நான் உன்னுடைய தந்தையின் சிற்பக் கலைச் சீடனாக இருந்திருக்கக் கூடாதா என்று தோன்றுகிறது. அப்படியானால் இந்த மூன்று நாட்களைப் போல் நம் வாழ்நாள் முழுதுமே ஆனந்த மயமாயிருக்குமல்லவா? உன்னையும் உன்னுடைய அற்புதக் கலையையும் காட்டிலும் எந்தச் சிம்மாசனந்தான் உயர்ந்தது? சாம்ராஜ்யம் என்னத்திற்கு? யுத்தமும் இரத்த வெள்ளமுந்தான் என்னத்திற்கு? உண்மையாகவே சொல்கிறேன், சிவகாமி! நான் சக்கரவர்த்திக்குச் சொல்லி அனுப்பி விடுகிறேன், எனக்கு இராஜ்யம் வேண்டாம் என்று. நானும் நீயும் உன் தந்தையுமாகப் படகில் ஏறிக் கிளம்புவோம். ரதியையும் சுகரையும் கூட அழைத்துக் கொள்வோம். எங்கேயாவது கடல் நடுவிலுள்ள தீவாந்தரத்துக்குப் போய்ச் சேர்வோம். அங்கே நமது வாழ்வை ஆனந்தமாகக் கழிப்போம். என்ன சொல்கிறாய்? 'ஆகட்டும்' என்று சொல்லு!"

"ஒருநாளும் சொல்ல மாட்டேன்!" என்று அழுத்தந் திருத்தமாகக் கூறினாள் சிவகாமி. மேலும் சொன்னாள்:—

"கதைகளிலே, காவியங்களிலே, கேட்டிருக்கிறேன்,—வீரப் பெண்கள் தங்கள் நாயகர்களுக்குப் போர்க் களத்தில் துணை நின்று சாஹஸச் செயல்கள் புரிந்தார்கள் என்று. தசரதருக்குக் கைகேயியும், அர்ச்சுனனுக்குச் சுபத்திரையும் போர்க் களத்தில் ரதம் ஓட்டினார்கள் என்றும் படித்திருக்கிறேன். அப்பேர்ப்பட்ட பாக்கியத்துக்கு நான் பிறக்கவில்லை. போர்க் களத்திற்கு என்னால் வர முடியாது. இரத்தத்தைக் கண்டால் நான் மூர்ச்சையடைந்து விடுவேன். ஆடவும், பாடவும் அலங்காரமாகக் கொலுவிருக்கவும் பிறந்த பேதைப் பெண் நான். ஆனால், தங்களையும் என்னைப் போலாக்க உடன்பட மாட்டேன். சிம்மாசனத்தில் அமர்ந்து சாம்ராஜ்யம் ஆளவும், சமர்க் களத்தில் பகைவர்களைச் சின்னாபின்னம் செய்யவும் பிறந்த தங்களைக் கல்லுளி பிடித்து வேலை செய்ய விடமாட்டேன். வாளும் வேலும் பிடித்து எதிரிகளைத் துவம்ஸம் செய்ய வேண்டிய கைகளை ஆடல்பாடலுக்குத் தாளம் போடும்படி விடமாட்டேன். சுவாமி! 'இராஜ்யம் என்னத்திற்கு? யுத்தம்

லட்சோப லட்சம் பிரஜைகள் தங்களுடைய தோள் வலியையும் வாள் வலியையும் நம்பி இந்தப் பெரிய ராஜ்யத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். பொல்லாத பகைவர்களை விரட்டி அடித்துப் பிரஜைகளைப் பாதுகாக்கும் பொறுப்பு தங்களுடைய இந்த இரு புஜங்களிலும் சார்ந்திருக்கிறது. அத்தகைய புஜங்கள் இன்று இந்த ஏழையை அணைத்துக் கொண்டிருப்பது என்னுடைய புண்ணியம்; பூர்வ ஜன்மத்து சுகிர்தம். ஆனால் இந்த பாக்கியத்தினால் என் தலை திரும்பிப் போய்விடவில்லை. என் பகுத்தறிவை நான் இழந்து விடவில்லை. பல்லவர் குலம் விளங்க வந்த மாமல்லருடைய புஜங்களின் வலிமையும் வீரமும் கேவலம் இந்தச் சிற்பியின் மகளைப் பாதுகாப்பதற்காக மட்டும் உபயோகப்பட வேண்டும் என்று ஒரு நாளும் சொல்ல மாட்டேன். அப்பேர்ப்பட்ட மகா தியாகத்தைத் தங்களிடம் நான் எதிர்பார்க்கவும் மாட்டேன்; ஏற்றுக் கொள்ளவும் மாட்டேன். பிரபு! இந்தக் கிராம வாசிகள் புள்ளலூர்ச் சண்டையில் தாங்கள் நிகழ்த்திய வீரச் செயல்களைப் பற்றி உற்சாகமாகப் பேசுவது என் காதில் விழும்போது என் உள்ளமும் உடலும் எப்படிப் பூரிக்கின்றன தெரியுமா?......"



"சிவகாமி! இந்தக் கிராம வாசிகள் உன்னுடைய நடனக் கலைத் திறனைப் பற்றிப் பாராட்டும் போதும் நானும் அப்படித்தான் பூரித்துப் போகிறேன். நினைத்துப் பார்த்தால், என்னுடைய சுயநலத்தைப் பற்றி எனக்கு வெட்கமாய்க்கூட இருக்கிறது!"

"தங்களிடம் ஒரு சுயநலத்தையும் நான் காணவில்லையே, பிரபு!"

"நீ காண மாட்டாய், சிவகாமி! உன்னுடைய காதலாகிற பொன்னாடையினால் என்னை நீ போர்த்தி விட்டுப் பார்க்கிறாய். அதனால் என்னிடமுள்ள குற்றங் குறைகளை நீ காண மாட்டாய். ஆனால் என்னுடைய சுயநலத்தை நான் நன்றாக உணர்கிறேன். இறைவன் உனக்கு அற்புதமான கலைச் செல்வத்தை அளித்திருக்கிறார். ஆயிரம் பதினாயிரம் மக்களை ஆனந்த சாகரத்தில் மூழ்கச் செய்யும் சக்தியை அளித்திருக்கிறார். அதையெல்லாம் நான் எனக்கே எனக்கென்று ஆக்கிக் கொள்ளப் பார்க்கிறேன். என்னைப் போன்ற சுயநலக்காரன் யார், சிவகாமி! உன்னுடைய அற்புத நடனக் கலை இறைவனுக்கே உரியது. — கேவலம் மனிதர்களுக்கு உரியதல்ல என்று என் தந்தை இரண்டொரு தடவை கூறியதுண்டு. அதன் பொருள் நேற்று இந்தக் கிராமத்துக் கோயிலில் நீ நடனமாடிய போதுதான் எனக்குத் தெரிந்தது. இறைவனுக்கு உரிய நிவேதனப் பொருளை நான் அபகரிக்கப் பார்ப்பது தர்மமா, அது தெய்வ அபசாரமல்லவா என்றுகூட எண்ணமிட்டேன்......"

சிவகாமி அப்போது எழுந்து மாமல்லருக்கு முன்புறமாக வந்து குனிந்தாள். அவளுடைய உத்தேசத்தை அறிந்து மாமல்லர் அவளைத் தடுப்பதற்கு முன்னால், அவருடைய பாதங்களைத் தொட்டுத் தன் கண்களிலே ஒற்றிக் கொண்டாள். பின்னர் அவர் எதிரில் அமர்ந்து கூறினாள்:—

"சுவாமி! தாங்கள்தான் என் இறைவன்; தாங்கள்தான் எனக்குக் கடவுள்; என்னுடைய நடனக் கலை இறைவனுக்கே உரியதாயிருக்கும் பட்சத்தில், அந்த உரிமை பூண்ட இறைவன் தாங்கள்தான். பிரபு! அந்த நாளில் நான் ஆர்வத்துடன் என் தந்தையிடம் நடனக் கலையைப் பயின்றதெல்லாம் அடுத்த தடவை தாங்கள் வரும்போது தங்களுக்கு ஆடிக் காட்டி மகிழ்விக்க வேண்டும் என்னும் கருத்துடனேதான். பின்னால், எனது நடனக் கலை கனிந்து உணர்ச்சியும் உயிரும் பெற்றதெல்லாம் தங்களுடைய காதலினால்தான். என்னை மறந்து ஆனந்த பரவச நிலையில் நான் ஆடும் போதெல்லாம்,



தங்களைப் பற்றிக் கெடுதலாக நினைப்பதில் எனக்கு அப்போது ஒருவித திருப்தி ஏற்பட்டது. 'இவ்வளவு மட்டமான மனுஷரின் காதல் இல்லாமற் போனால்தான் என்ன?' என்று எண்ணுவதில் ஒரு ஆறுதல் உண்டாயிற்று. ஆனாலும், என் வெளி மனம் அப்படி நம்பியதே தவிர, உள் நெஞ்சம் 'இதெல்லாம் பொய்' என்று சொல்லிக்கொண்டிருந்தது. 'மாமல்லர் வீர புருஷர்; அவருடைய காதலுக்கு நீ பாத்திரமானவள் அல்ல; ஆகையால் அவரைப் பற்றித் தாழ்வாக எண்ணுகிறாய்; இது உன் நீச குணம்' என்று என் உள் இதயம் எனக்கு இடித்துச் சொல்லிக் கொண்டிருந்தது. பிரபு! என்னை மன்னிப்பீர்களா?"

"சிவகாமி! உன்னை மன்னிப்பதற்குரிய குற்றம் எதுவும் நீ செய்யவில்லை. அவ்வளவு மன வேதனைக்கு உன்னை ஆளாக்கியதற்காக நான்தான் மன்னிப்புக் கேட்டுக் கொள்ள வேண்டும். இனிமேல் அப்படியெல்லாம் நம்ப மாட்டாயல்லவா?" என்று கேட்டார் மாமல்லர்.

"ஒரு நாளும் நம்ப மாட்டேன். அந்த புத்த பிக்ஷுவை மறுபடி பார்க்க நேர்ந்தால் அவரை இலேசில் விடப் போவதில்லை!" என்றாள் சிவகாமி.

பிறகு, திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டு, "பிரபு! கூடு விட்டுக் கூடு பாயும் வித்தை என்று கதைகளில் சொல்கிறார்களே? அதிலே உங்களுக்கு நம்பிக்கை உண்டா?" என்று கேட்டாள்.

"என்ன கேட்கிறாய், சிவகாமி! நம்பிக்கை உண்டா என்றால்?......"

"ஒரு உயிர் ஒரு உடலிலிருந்து இன்னொரு உடலுக்குப் போவது சாத்தியமாகுமா என்று கேட்டேன். அதாவது, ஒரு மனுஷர், பாம்பு உருவம் எடுத்துக் கொள்ள முடியுமா?......"

இப்படிக் கேட்டபோது சிவகாமியின் உடம்பு மறுபடியும் நடுங்குவதை மாமல்லர் கண்டார். உடனே அவளை ஆதரவோடு தன் அகன்ற மார்பிலே சேர்த்து அணைத்துக் கொண்டு, "இதென்ன வீண் பிரமை? அர்த்தமற்ற பீதி? மனுஷனாவது, பாம்பு உருவங் கொள்ளவாவது? அப்படி ஒருவன் பாம்பு உருவம் எடுத்து உன்னைத் தீண்ட வரும் பட்சத்தில், நான் கருடன் உருவங் கொண்டு வந்து அவனை சம்ஹரிப்பேன். அல்லது உன் எதிரே அவனுடைய விஷப் பல்லைப் பிடுங்கி எறிவேன். நான் இருக்கும்போது உனக்கு ஏன் பயம்?" என்றார்.

"பிரபு! எப்போதும் தாங்கள் என் அருகில் என்னைப் பாதுகாத்துக் கொண்டிருப்பீர்களா? இந்த ஏழைப் பெண்ணைக் காப்பாற்றுவதுதானா உங்களுக்கு வேலை? உங்களுடைய பாதுகாப்பை எதிர்பார்த்து இராஜ்ய லக்ஷ்மி காத்துக் கொண்டிருக்கிறாளே?" என்றாள் சிவகாமி.

"சிவகாமி! நீ மட்டும் ஒரு வார்த்தை சொல்லு! இராஜ்யம் எக்கேடாவது கெடட்டும் என்று விட்டு விட்டு உன்னோடு இருந்து விடுகிறேன். வெறும் வார்த்தைக்குச் சொல்லவில்லை. உன்னைவிட எனக்கு இராஜ்யம் பெரிதல்ல. இந்தக் கிராமத்திலேயே நாம் தங்கி விடுவோம். இல்லாவிட்டால், பானைத் தெப்பத்தில் ஏறிக் கொண்டு அலை கடலில் மிதந்து போய்க்கொண்டே இருப்போம். நடுக்கடலில் மனித சஞ்சாரமே இல்லாத தீவு ஒன்றை அடைந்து அதிலே ஆனந்தமாய்க் காலங் கழிப்போம்..." என்று மாமல்லர் கூறி வந்தபோது, சிவகாமி குறுக்கிட்டாள்.

"பிரபு! அவ்வளவு சுயநலக்காரி இல்லை நான். அப்படி உங்களை எனக்கே உரிமைப்படுத்திக் கொள்ள வேண்டுமென்ற எண்ணம் எனக்கு இல்லை. விஸ்தாரமான சாம்ராஜ்யத்திற்கு உரிமை கொண்டவர் தாங்கள். வாழையடி வாழையாக வந்த பல்லவ வம்சத்தின் சிம்மாசனத்துக்குத் தனி உரிமை பூண்டவர் தாங்கள்.

# சிவகாமியின் சபதம்



## அத்தியாயம் 38

## தியாகப் போட்டி

சிவகாமியின் அலறலைக் கேட்ட சர்ப்பம் சற்று நேரம் திகைத்து நின்றது. பிறகு, தன் வழியே போய் விட்டது.

தூரத்தில், பாறைகளுக்கு அப்பாலிருந்து, "சிவகாமி! என்னைக் கூப்பிட்டாயா?" என்று ஆயனரின் குரல் கேட்டது. "இல்லை, அப்பா!" என்று சிவகாமி உரத்த குரலில் கூறினாள்.

இந்த இரண்டு வார்த்தைகள் மாமல்லருக்கு எவ்வளவு மகிழ்ச்சியையும் நன்றி உணர்ச்சியையும் உண்டாக்கின என்பதைச் சிவகாமி, அவருடைய கரங்களின் ஸ்பரிசத்தினாலேயே உணர்ந்தாள்.

இருவரும் அந்த மரத்தடியிலிருந்து சற்று அப்பால் சென்று பட்டப் பகல் போல் வெளிச்சமாயிருந்த பாறையின்மீது உட்கார்ந்தார்கள்.

"மன்னிப்புக் கேட்பதாகச் சொன்னாயே, சிவகாமி! எதற்காக?" என்று மாமல்லர் கேட்டார்.

"தங்களைப் பற்றிப் பொல்லாத வசை மொழிகளைக் கேட்டுக் கொண்டு சும்மாயிருந்ததற்காக; அம்மொழிகளை நம்பியதற்காக!"

"இவ்வளவுதானே! மன்னித்து விட்டேன். அப்படி யார் என்னைப் பற்றி என்ன கூறினார்கள்?"

"நாகநந்தி என்னும் புத்த பிக்ஷுவைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோமல்லவா? அவர்தான் தங்களைப் 'பயங்கொள்ளிப் பல்லவன்' என்றார். தாங்கள் போர்க்களத்துக்குப் போகப் பயந்து கொண்டு தான் கோட்டைக்குள் ஒளிந்து கொண்டிருப்பதாகச் சொன்னார். இன்னும் என்னவெல்லாமோ சொன்னார்......"

சிவகாமி கூறியதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த மாமல்லர், "இதற்காக நாகநந்தியின் மேல் எனக்குக் கோபம் இல்லை. என் தந்தைபேரில்தான் கோபம். இராஜ்யத்தைத் தேடி யுத்தம் வந்திருக்கும் போது நான் கோட்டைக்குள்ளேயே அடைபட்டுக் கிடந்தால் பயங்கொள்ளி என்று ஏன் ஜனங்கள் சொல்ல மாட்டார்கள்?......அதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. ஆனால், அதையெல்லாம் நீயும் நம்பினாயா, சிவகாமி?" என்று மாமல்லர் வியப்புக் குரலில் கேட்டார்.

"ஆம், பிரபு! நம்பினேன். தங்களைப் பிரிந்திருந்ததில் என் மனவேதனையைச் சகிக்க முடியாமல் அந்த அவதூறுகளை நம்பினேன்.

கல்கி

சாஹித்ய கர்த்தாவுமான ஸ்ரீ எம். பி. பெரியசாமி பி. ஏ., எல். டி. ("பெ. தூரன்") பின்வருமாறு எழுதியுள்ளார்:—

"பாரதியார் ஞாபகச் சின்னம் மிகப் பெரியதாகத்தான் அமைய வேண்டும். அதையே ஒவ்வொரு தமிழ் மகனும் விரும்புவான் என்பது நிச்சயம். எனக்கு ஒரு சின்ன யோசனை தோன்றுகிறது......பாரதியாருடைய கையெழுத்துப் பிரதிகள், கடிதங்கள், அவர் உபயோகித்த பொருள் முதலியவைகளைச் சேகரித்து வைக்கவேண்டும். மேல் நாட்டார் இவ்வித ஞாபகச் சின்னங்களை அதிக பொருட் செலவையும் கருதாது சேகரித்துப் போற்றி வருகிறார்கள். நாமும் இதை ஏன் செய்யக் கூடாது?"

கட்டாயம் செய்ய வேண்டும் என்றுதான் நானும் அபிப்பிராயப்படுகிறேன். இன்னும் பலருக்கும் இதேவித யோசனை தோன்றியிருக்கிறது என்பதை மாறுமதுரை ஸ்ரீ வி. விசுவநாதன் பி. ஏ., எல். டி. அவர்களின் கடிதத்திலிருந்து காணலாம்:—

"சுமார் பத்து வருஷங்களுக்கு முன்பு நான் ஒரு கனவு கண்டேன். அது என்னவெனில், பாரதியார் பிறந்த இடத்தில் பாரதி நிலையம் என்ற கட்டிடம் ஒன்று எழுப்பவேண்டும். அக் கட்டிடத்தில் பாரதியின் உருவச் சிலை ஒன்று நிறுவ வேண்டும். நிலையத்தைச் சேர்ந்த நூல் நிலையமொன்றும், உடற் பயிற்சிக்கான வசதிகளும் ஏற்படுத்த வேண்டும்......பாரதி பாடல்களை உயிரோவியங்களாக மாற்றி நிலையத்தை அலங்கரிக்க வேண்டும். பாரதி ஜயந்தியை நிலையத்தில் வருடந்தோறும் பெரியதோர் திருவிழாவாகக் கொண்டாட வேண்டும். மேனாடுகளில் ஷேக்ஸ்பியர் போன்ற மகா கவிகளின் வீடு, உபயோகித்த பொருள்கள் முதலியவற்றைச் சேகரித்துப் பத்திரப்படுத்தி வருவதுபோல், பாரதியார் உபயோகித்த, பாரதியாருக்குச் சொந்தமான உடை, புத்தகங்கள், பெட்டி, பாரதியார் எழுதிய கடிதங்கள் போன்ற கிடைக்கக் கூடிய பொருள்களைச் சேகரித்து ஒரு கண் காட்சிப் பகுதி திரட்டி வைத்தல் வேண்டும். சுருங்கச் சொல்லுமிடத்து, எட்டயபுரத்தில் அமைக்கப் பெறும் பாரதி நிலையம் தமிழ் மக்களின் புனித யாத்திரைக்கு இலக்காக வேண்டும்.

இதற்கெல்லாம் அதிகப் பொருள் தேவை. ரூ. 5000 மட்டுமல்ல, ரூ. 50,000-ம் வேண்டித்தான் இருக்கும். ஆயினும் என்ன?........."

ஸ்ரீ விசுவநாதனைப்போல் நம்மில் பலரும் கனவு கண்டுதான் இருப்போம். ஆனால் நமக்கும் ஸ்ரீ விசுவநாதனுக்கும் என்ன வித்தியாசம் என்றால், கனவில் ஒரு பகுதியை நிறைவேற்றி வைக்கும் சக்தி அவரிடமே இருக்கிறது. மேலே அவர் எழுதி யிருப்பதைக் கேளுங்கள்:—

"இப்பெரு முயற்சிக்கு என்னாலியன்ற உதவியைச் செய்வதற்கு எப்பொழுதும் காத்திருக்கிறேன். அதற்கு அச்சாரமாக, பாரதி பிரசுராலயம் இதுவரை வெளியிட்டுள்ள பாரதி நூல்களின் ஒரு செட்டை நூல் நிலையத்துக்கென இதோ எடுத்து வைத்து விட்டேன். இனி வெளிவரும் நூல்களையும் கொடுக்கத் தயாரா யிருக்கிறேன். அது மட்டுமல்ல, என் எண்ணப்படி — 'பாரதி நிலையம்' அமைக்கப் பெறுமானால் "பாரதி பொருட் காட்சிப் பகுதிக்கு ஒரு அபூர்வமான பொருள் கொடுத்து உதவவும் சித்தமா யிருக்கிறேன். அது என்னவென்று நினைக்கிறீர்கள்? நான் தேடற்கரிய திரவியமாய், கண்ணினும் இனியதாய்க் காப்பாற்றி வைத்துள்ள, காண்போர் கண்ணைக் கவரும் பாரதியின் மணி எழுத்துக்களாலான பாரதி நூல்களின் கையெழுத்துப் பிரதிகளே! ரூபாய், அணா, பைசாவில் அவற்றின் மதிப்பை உங்களால் போட்டுக்கொள்ள முடியுமானால் தாராளமாய்ச் செய்யுங்கள்!"

அம்மாதிரி வீண் முயற்சியில் நாம் இறங்க வேண்டியதில்லை. அதற்குப் பதிலாக, ஸ்ரீ விசுவநாதன் அவர்களிடம் இருக்கும் விலை மதிப்பில்லாத பாரதியாரின் கையெழுத்துப் பிரதிகளை வாங்கி வைப்பதற்குரியதாக எட்டயபுரத்தில் பாரதியார் ஞாபகச் சின்னத்தைச் சிறப்பாக அமைக்கத்தான் முயற்சி செய்ய வேண்டும்.

ஸ்ரீ வி. விசுவநாதன் பி. ஏ., எல். டி., பாரதியாரின் உடன்பிறந்த சகோதரர். பாரதி பிரசுராலயத்தின் உரிமையாளர்களில் ஒருவர். அவருடைய ஒத்துழைப்பு இந்தப் புனித முயற்சிக்குக் கிடைத்திருப்பது ஒரு பெரிய விசேஷம். அவரிடமுள்ள பாரதி கையெழுத்துப் பிரதிகளை அபகரித்துத் தமிழ் நாட்டின் பொது உடைமையாகச் செய்யும் வரையில் எனக்குத் தூக்கம் வராதென்று தோன்றுகிறது!

• • •

பாரதியாருடைய அருமைப் புதல்வியான ஸ்ரீமதி தங்கம்மாள் பாரதி அவர்களின் ஆசியும் இந்த முயற்சிக்குக் கிடைத்திருக்கிறது. ஸ்ரீமதி தங்கம்மாள் தமது கடிதத்தில் கூறுவதாவது:—

"ரொம்ப சந்தோஷம். பாரதி நிதி வசூல் மும்முரமாக ஆரம்பித்திருக்கிறீர்கள்...... எட்டு வருஷங்களுக்கு முன்பே பாரதியார் ஞாபகார்த்தச் சின்னம் ஏற்படுத்த வேண்டும் என்று நான் பெரிதும் ஆத்திரப்பட்டேன். அதற்காகச் சிங்கப்பூர்ப் பத்திரிகைகளில் ஒரு வேண்டுகோளும் விடுத்தேன். காலம் சரியில்லாதபடியால் அம்முயற்சி நிறைவேறவில்லை...... இப்போது எனது நெடு நாளைய ஆவல் நிறைவேறும் என்று தோன்றுகிறது. காவிய மாளிகையைக் கட்டிய கவி, 'காணி நிலம் வேண்டும்' என்று பராசக்தியிடம் கேட்டார். பாரதியார் ஞாபகார்த்தமாக மனதினுள் கற்பனை மாளிகை கட்டிய நான் இப்போது உண்மையான கல் மாளிகையைச் சீக்கிரம் தோற்றுவிக்க வேண்டுமென்று பராசக்தியை வேண்டுகிறேன்."

ஸ்ரீமதி தங்கம்மாளின் பிரார்த்தனை கூடிய சீக்கிரத்தில் நிறைவேறப் போகிறதென்பதில் எனக்கு கொஞ்சமும் சந்தேகமில்லை. பாரதியார் பிறந்த ஊரில் அவருக்கு

# வாழ்க நம் அமரகவி

சென்னையில் இரண்டு மாதத்துக்கு முன்னால் ஸ்ரீ வி. எல். நரசு அவர்களுக்கு ஒரு விருந்து நடந்தது. டாக்கி உலகத்தில் ஸ்ரீ நரசு பிரவேசம் செய்ததைக் கொண்டாடும் பொருட்டு, தமிழ் நாடு டாக்கீஸ் சொந்தக்காரர் ஸ்ரீ சுந்தரராஜன் அவர்களால் மேற்படி விருந்து அளிக்கப்பட்டது.

அச்சமயம் சென்னையில் இருந்த டி.கே.சி. அவர்களை மேற்படி விருந்துக்கு ஸ்ரீ சுந்தரராஜன் அழைத்தபோது, "அதற்கென்ன, அவசியம் வருகிறேன்! நல்ல மணமுள்ள காப்பிப் பொடி மூலமாக ஸ்ரீ நரசுவுக்கும் எனக்கும் பந்துத்வம் உண்டு" என்று டி. கே. சி. கூறினார். காப்பிப் பொடியைத் தவிர இன்னும் ஒரு பந்துத்வமும் அவர்களுக்குள் உண்டு என்பது விருந்துக்குப் பிறகு தெரிய வந்தது.

எப்படி யென்றால், விருந்து முடிந்ததும், இங்கிலீஷ் டின்னர் பார்ட்டி சம்பிரதாயப்படி யாராவது பேசவேண்டும் என்ற பிரஸ்தாபம் வந்தது. யார் பேசுவது என்று சர்ச்சை நடந்து கொண்டிருந்தபோது, ஸ்ரீ வி. எல். நரசு ஒரு போடு போட்டார்! "பேச்சு ஒன்றும் வேண்டாம். டி. கே. சி. அவர்கள் கம்ப ராமாயணத்திலிருந்து இரண்டு பாட்டுச் சொல்லட்டும்; அனைத்துமாய்க் கேட்டுவிட்டுப் போகலாம்!" என்றார். "மணியான யோசனை!" என்றும், "நரசு காப்பி மாதிரியே உயர்வான யோசனை!" என்றும் பலர் ஆமோதித்தார்கள். அந்தப் படியே டி. கே. சி. அவர்கள் இரண்டு அருமையான கம்பன் பாடல்களைச் சொல்லி எல்லாரையும் மகிழ்வித்தார்கள்.

அன்றைய தினம் ஒருவாறு ஸ்ரீ வி. எல். நரசு எப்பேர்ப்பட்ட மனிதர் என்பதை நான் தெரிந்து கொண்டேன். ஆனாலும், பாரதியார் நிதிக்காக ரூ. 2000-த்துக்கு அவரிடமிருந்து செக் வந்தபோது, எனக்குக் கொஞ்சம் தூக்கி வாரித்தான் போட்டது. செக்கில் எண்ணில் ரூ. 2000 என்று பார்த்த பிறகு, எழுத்திலும் ரூபாய் இரண்டாயிரம் என்று எழுதியிருக்கிறதா என்று பார்த்துத் தான் உறுதி செய்துகொண்டேன்.

இந்த யுத்த காலத்தில் எத்தனையோ பேர் ஏராளமான பணம் சம்பாதிக்கிறார்கள். அவர்களில் சிலர் நல்ல காரியங்களுக்குப் பெரிய நன்கொடைகள் அளிக்கிறார்கள். அப்படி நன்கொடை யளிக்கும்போதே, அதன் மூலம் தமது செல்வாக்கு எவ்வளவு அதிகமாகும், சர்க்கார் வட்டாரங்களில் மதிப்பு எவ்வளவு உயரும், அடுத்தபடி என்ன பட்டம் கிடைக்கும் என்று கணக்கிட்டுக் கொண்டு கொடுப்பவர்களும் உண்டு.

பாரதியார் நிதிக்கு ஸ்ரீ வி. எல். நரசு அளித்திருக்கும் இந்தச் சிறந்த நன்கொடையோ கலப்பற்ற தூய நோக்கம் கொண்டதாகும். இதன் மூலம் அவருடைய பெயர் தேசமெல்லாம் பிரபலமாகப் போவதில்லை. வேறு எந்தவித நன்மையும் இல்லை. அவருடைய தமிழ் அன்பும் இலக்கியப் பண்பாடுந்தான் இந்த நன்கொடைக்குத் தூண்டுதல்கள். தமிழ் நாட்டையே உயர்த்திய மகா கவிக்கு ஞாபகச் சின்னமும் மகத்தானதா யிருக்க வேண்டுமென்று எண்ணிக் கொடுத்திருக்கிறார். பார்க்கப் போனால், அவருக்கு நான் நன்றி செலுத்தவேண்டிய அவசியந்தான் என்ன?

* * *

தமிழ் நாட்டில் பிறந்தவர்கள், தமிழ் பேசுகிறவர்கள் எல்லாரும் தமிழர்கள் என்பது நமது கொள்கை. "வானமளந்த தமிழ்" என்று பெருமை கொள்ள அவர்கள் எல்லாருக்கும் உரிமை யுண்டு. முஸ்லிம்கள், கிறிஸ்துவர்கள் எல்லாரையும் சேர்த்துத் தான் சொல்கிறேன்.

இந்த உரிமையைப் பல முஸ்லிம் பிரமுகர்களும் கிறிஸ்துவப் பிரமுகர்களும் உபயோகப்படுத்திக் கொள்வதைப் பார்க்க நமக்கு எல்லையற்ற மகிழ்ச்சி உண்டாகிறது. கோவையில் ஜனாப் பெரிய முகைதீன் பிள்ளை ராவுத்தர், ஜனாப் சின்ன முகைதீன் பிள்ளை ராவுத்தர், பங்களூரில் ஜனாப் முகம்மது நஹீம் கலீலி ஆகியவர்களும், ஸ்ரீ ஜெ. ச. ஏ. பெரைரா, திவான்பகதூர் ஐ. எக்ஸ். பெரைரா ஆகிய கிறிஸ்துவப் பிரமுகர்களும் பாரதியார் ஞாபகார்த்த நிதிக்குப் பெரிய நன்கொடைகள் அளித்திருப்பது போற்றத் தக்கதாகும்.

* * *

பாரதியார் ஞாபகச் சின்னம் எப்படி அமையவேண்டும் என்பது பற்றிச் சில நண்பர்கள் யோசனைகளை எழுதியிருக்கிறார்கள். உதாரணமாக, கோயமுத்தூர் ஸ்ரீ ராமகிருஷ்ண வித்யாலயத்தின் தலைவரும், தமிழ்

கூடிய அரசாங்கம் ஸ்தாபிக்கப்பட வேண்டுமென்று பிரிட்டிஷார் நினைப்பது நியாயமே யல்லவா?

இது விஷயமாகச் சென்ற வாரத்தில் லண்டன் "டைம்ஸ்" பத்திரிகை எழுதிய தலையங்கம் விசேஷமாகக் குறிப்பிடத் தக்கதாகும்:

"பைத்தியக்கார ஜெர்மனி, 'ஐரோப்பாவில் நான் ஆதிக்யம் வகிக்கப் போகிறேன்' என்று பிதற்றிக்கொண்டேயிருந்தது. அதற்கு அந்த ஆதிக்யம் கிடைக்கவு மில்லை; கிடைக்கப் போவதுமில்லை. ருஷியாவோ, 'எனக்கு ஐரோப்பிய ஆதிக்யம் வேண்டாம்; வேறு தேசங்களில் நான் தலையிடவே போவதில்லை' என்று சொல்லிக்கொண்டிருந்தது. ஆனால் உண்மையிலே ஐரோப்பாவின் முழு ஆதிக்யமும் ருஷியாவின் கையிலேதான் இப்போது போய்க் கொண்டிருக்கிறது!"

இவ்விதம் லண்டன் "டைம்ஸ்" பத்திரிகை எழுதியது ரொம்பவும் உண்மை என்பதில் சந்தேகமில்லை.

ஒரு உதாரணம் பாருங்கள்: பிரான்ஸிலே டி கால் அரசாங்கத்தை ஸ்தாபிப்பதற்காகச் சர்ச்சில் பாரிஸுக்குப் போனார். ஆனால் டி கால் என்ன செய்தார்? சர்ச்சிலை வாயாரப் புகழ்ந்து விட்டு நேரே ஆகாச விமானத்தில் ஏறி மாஸ்கோவுக்குச் சென்றார்!

அந்த இரும்பு மனிதராகிய ஸ்டாலினோ எதற்கும் அசைந்து கொடுக்காமல் தம் காரியத்தைத் தாம் பார்த்துக் கொண்டிருக்கிறார்.

ஒரு தேசத்துக்குள்ளே ருஷியப் படைகள் புகும்போதே, "உங்கள் உள்நாட்டு விவகாரங்களில் நாங்கள் தலையிடப் போவதில்லை" என்ற ஸ்டாலின் பிரகடனமும் போகிறது. கடைசியில், நடப்பதென்ன? ருஷியாவுக்குச் சாதகமான அரசாங்கந்தான் ஏற்படுகிறது. அப்புறம் கப் சிப்! ஒரு கலகம், ஒரு வழக்கு அங்கே கிடையாது!

ஆனால் பிரிட்டிஷார் தலையிட்டு அரசாங்கங்களை ஸ்தாபிக்கும் தேசங்களிலோ உடனே தகராறும் கூடக் கிளம்பி விடுகிறது!

பெல்ஜியத்திலே கிளம்பிற்று! இதாலியிலே கிளம்பிற்று! இப்போது கிரீஸிலே மேற்படி தகராறு பிரமாதமாகக் கிளம்பி யிருக்கிறது!

துரதிர்ஷ்டவசமாக பிரிட்டிஷ் ஆதரவு பெற்ற அரசாங்கங்கள் அவ்வளவாக வெளி உலகத்தின் அநுதாபத்தைப் பெற்றனவாக இருப்பதில்லை!

யுத்தம் நெருங்கி வந்ததும் தேசத்தை விட்டு ஓடியவர்கள், ஜெர்மனிக்குப் பணிந்து போய் ஒத்துழைத்தவர்கள் இவர்கள் அடங்கிய சர்க்கார்தான் பிரிட்டனுக்குச் சாதகமாகின்றன.

தேசம் ஜெர்மனியின் ஆதிக்யத்தில் இருந்தபோது எதிர்ப்பு உணர்ச்சி குன்றாமல் பார்த்துக் கொண்டிருந்தவர்களும், இரகசிய முறைகளினால் யுத்தம் நடத்தி வந்தவர்களும் ஆகிய பொது உடைமைக்காரர்கள் அந்தந்த அரசாங்கங்களை எதிர்த்துக் கலகம் செய்கிறவர்கள் ஆகி விடுகிறார்கள்.

இவர்களுக்கு விரோதமாகவும் பழம் பெருச்சாளிகளுக்குச் சாதகமாகவும் பிரிட்டன் தலையிட வேண்டியதா யிருக்கிறது. கிரீஸில் இந்தத் தலையீடு விபரீதமாகி, பிரிட்டிஷ் டாங்கிகள் கிரேக்கப் பொது உடைமைக்காரர் மீது குண்டு போடும் நிலைமையை அடைந்து விட்டது!

போதும் போதாததற்கு, இந்த மாதிரி பிரிட்டன் சங்கடத்தில் மாட்டிக் கொண்டிருக்கும் சமயம் பார்த்து, அமெரிக்கா, "ஐரோப்பிய உள்நாட்டு விவகாரங்களில் பிரிட்டன் தலையிடுவது பிசகு;" என்று ஒரு போடு போட்டு வைக்கிறது!

என்ன துரதிர்ஷ்டம்! எத்தனையோ உயிரைக் கொடுத்து, எத்தனையோ பொருட் செலவு செய்து, அந்தந்த தேசங்களை ஜெர்மன் ஆதிக்யத்திலிருந்து விடுதலை செய்த பிறகு, இந்த மாதிரி வீண் கெட்ட பெயருக்கும் பிரிட்டன் உள்ளாக வேண்டி யிருக்கிறது!

என்னமோ, போங்கள்! நமக்கு ஒன்றும் பிடிக்கவில்லை. இப்படி நன்றி கெட்ட ஐரோப்பியர்களுக்காக, நன்றி கெட்ட உலகத்துக்காக, — பிரிட்டன் இவ்வளவு பிராணனைக் கொடுத்து ஏன் யுத்தம் செய்ய வேண்டும் என்றுகூடத் தோன்றி விடுகிற தல்லவா?

யுத்தம் முடியும் வரையில் கூடக் காத்திராமல் அவசரப் பட்டுக்கொண்டு கிளம்பி யிருக்கும் இந்த 'வெற்றிச் சங்கட'த்தைச் சர்ச்சில் துரை எப்படித் தான் சமாளிக்கப் போகிறார் என்பதை உலகத்தோடு சேர்ந்து நாமும் ஆவலோடு பார்த்துக் கொண்டிருக்கிறோம்.

---

ஐந்து ரூபாய் பரிசு: சென்ற இதழில் வெளியான "எழுப்ப வேண்டியதுதான்!" என்னும் காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: ராஜீ, மயிலாப்பூர், சென்னை.

டாலினின் பலமும் பிரிட்டனுக்குச் சாதகமாக ஜெர்மன் எல்லைப் புறத்தில் அணிவகுத்து நிற்கின்றன.

அந்தப் பக்கத்திலோ அநேகர் ருஷியாவின் மூலபல சேனை, ஒரு மகா சமுத்திரத்தைப் போல் அலை மோதிக் கொண்டு, மூன்று புறமும் ஜெர்மனியைக் கவிந்து கொண்டு முன்னேறி வந்து கொண்டிருக்கிறது.

ஆகவே, யுத்த சங்கடத்திலிருந்து பிரிட்டன் முடிவாகக் கரையேறி விடும் நாள் நெருங்கி விட்டதென்று சொல்லலாம். 1915-ம் வருஷத்தில், பூரண வெற்றியுடன் யுத்தம் முடிந்து விடும் என்று எதிர் பார்க்கலாம்.

இப்படிப்பட்ட சமயத்திலேதான், சர்ச்சிலைத் தேடிக்கொண்டு வெற்றியின் சங்கடம் வந்து நெருங்கியிருக்கிறது!

அப்படி வந்திருக்கும் சங்கடம் எத்தகையது என்று பார்க்கலாம்.

* * *

ஜெர்மனியை வெற்றி கொள்வதற்காக நேசப் படைகள் முன்னேறிப் போகும் மார்க்கத்தில் மற்றும் பல ஐரோப்பிய தேசங்கள் இருக்கின்றன.

இந்த நாடுகள் ஏற்கெனவே ஜெர்மனியரால் ஆக்கிரமிக்கப்பட்டு அடிமையாக்கப் பட்டவை.

இவ்விதம் அடிமையாக்கப்பட்ட நாடுகளில் எதிர்ப்பு உணர்ச்சி மறைந்து போகாமல் வளர்ந்து வருவதற்காகத் தான் முக்கியமாகச் சர்ச்சிலும் ரூஸ்வெல்ட்டும் அட்லாண்டிக் சாஸனத்தை வெளியிட்டார்கள்.

அதன் வாசகம் கொஞ்சம் பொதுப்படையாக அமைந்து விடவே, "அட்லாண்டிக் சாஸனம் இந்தியா, பர்மா முதலிய நாடுகளுக்கும் உண்டா?" என்று கேள்வி கிளம்பிற்று. "இல்லை; அது ஜெர்மனியினால் ஆக்கிரமிக்கப்பட்ட ஐரோப்பிய நாடுகளுக்குத்தான்!" என்று சர்ச்சில் பட்டவர்த்தனமாய்ச் சொன்னார். ரூஸ்வெல்ட் மௌனம் சாதித்து மழுப்பினார்.

கடைசியாக, இப்போது பார்த்தால், "உங்கள் அப்பனுக்கும் பெப்பே!" என்பதுபோல், ஐரோப்பிய நாடுகளுக்கும் அதே கதிதான் என்ற சந்தேகம் ஏற்படும்படியாகச் சிற்சில காரியங்கள் நடந்து வருகின்றன. அந்தப் பழி பாவம் எல்லாம், — ஐயோ! பாவம்! சர்ச்சிலின் தலையிலும் பிரிட்டனுடைய தலையிலும் எப்படியோ விழுந்து வருகின்றன.

விஷயம் என்னவென்றால், நேசக் கட்சிப் படைகள் ஜெர்மன் ஆதிக்கத்திலிருந்து விடுவிக்கும் நாடுகளில் எல்லாம் அரசாங்கங்கள் ஏற்பட்டாக வேண்டுமல்லவா? அந்த அரசாங்கங்களை எந்த முறையில் அமைப்பது? யாருடைய விருப்பத்தின்படி அமைப்பது? ஜெர்மன் பிடியிலிருந்து விடுதலையடைந்து வரும் ஒவ்வொரு தேசத்திலும் இந்தத் தகராறு ஏற்பட்டு வருகிறது. தேசம் முழுதும் விடுதலையடைவதற்கு முன்பே மேற்படி அரசாங்கத் தகராறு ஏற்பட்டு விடுகிறது.

போலந்தில், பெல்ஜியத்தில், இதாலியில், கிரீஸில், — மேற்கண்ட தகராறுகள் ஏற்பட்டிருக்கின்றன.

இந்த உள் நாட்டுக் கட்சிப் போராட்டங்களில், "யுத்தத்திற்குப் பிறகு ஐரோப்பாவில் யார் ஆதிக்கம் வகிப்பது? பிரிட்டனா? ருஷியாவா?" என்ற பெரும் பிரச்னையும் கலந்து குழப்பத்தைப் பன்மடங்கு அதிகமாக்குகிறது.

* * *

மேற்படி ஐரோப்பிய ஆதிக்கப் பிரச்னை எப்படி ஏற்பட்டது என்பதை இப்போது கொஞ்சம் பார்க்கலாம்.

வெகு காலமாக பிரிட்டிஷ் இராஜதந்திரத்தில் ஒரு முக்கிய அம்சம் என்னவென்றால், ஐரோப்பாவில் எந்த ஒரு தேசத்தின் சக்தியும் மிதமிஞ்சிப் பெருக விடக் கூடாது என்பதுதான். அப்படி மிதமிஞ்சிப் பெருகிவிட்டால் பிரிட்டனின் உலக ஆதிபத்தியத்துக்குப் பங்கம் வந்துவிடுமல்லவா?

இந்தக் கொள்கையினாலேயே ஐரோப்பாவின் யுத்தங்கள் பலவற்றில் பிரிட்டன் கலந்து கொண்டு வந்திருக்கிறது. சென்ற யுத்தத்திற்குப் பிறகு ஜெர்மனி புத்துயிர் பெற்று எழுவதற்குப் பிரிட்டன் சில காலம் உதவி செய்து வந்த காரணமும் இதுதான்!

அப்பேர்ப்பட்ட பிரிட்டனுடைய பரம்பரையான இராஜ தந்திரக் கொள்கைக்கு இந்த யுத்தத்தின் பயனாக ஆபத்து வந்து விடும்போலிருக்கிறது.

அதாவது, ஐரோப்பாவில் மற்ற எல்லாத் தேசங்களின் சக்தியும் வெகுவாகக் குன்றிப்போய் ருஷியாவின் சக்தி மட்டும் அபரிமிதமாக வளர்ந்து விடும்போலிருக்கிறது.

இந்த நிலைமையில், பிரிட்டிஷ் படைகளால் விடுதலையடையும் தேசங்களில் பிரிட்டனுக்குச் சாதகமாயிருக்கக்

# சர்ச்சில் சங்கடம்

இந்தியாவிலுள்ள மாதா கோயில்களிலும், கிறிஸ்துவ தேவாலயங்களிலும் அமைதி நிலவிக் கொண்டுதானிருக்கிறது. பிரார்த்தனைகள் சரிவர நடந்து கொண்டிருக்கின்றன. எந்த சர்ச்சிலேயும் எவ்வித சங்கடமும் நேர்ந்ததாகத் தெரியவில்லை.

நாம் குறிப்பிடும் 'சர்ச்சில் சங்கட'த்தில் ஆறாம் வேற்றுமை உருபு தொக்கி நிற்கிறது. அதாவது, 'சர்ச்சிலின் சங்கடம்' அல்லது 'சர்ச்சிலுடைய சங்கடம்' என்று விரியும்.

பாருங்கள்! நமது காரியாலயத்துச் சர்ச்சில் துரையானவர் இன்று காலையில் எழுந்ததும் தோட்டத்தைச் சுற்றி அணில், கிளி முதலியவற்றை யெல்லாம் மிரண்டு ஓடச் செய்து விட்டுத் திரும்பி வந்தார். வந்தவர், ஜன்னல் வழியாகக் குறுக்கு வழியில் உள்ளே பிரவேசித்தபோது ஜன்னல் கதவு படார் என்று சாத்திக் கொண்டு, உடம்பின் பெரும் பகுதி உள்ளேயும், வால் மட்டும் வெளியிலுமாக மாட்டிக் கொண்டார். இந்த நிலையில் அவர் சங்கடப்பட்டுக் கொண்டிருந்த சமயம் பார்த்து, அந்தப் பொல்லாத ரூஸ்வெல்ட் துரையானவர் எதிரில் வந்து நின்று கொண்டு, "நீ இப்படியெல்லாம் ஆபீஸுக்குள் திடுப்பிரவேசம் செய்வதையும், ஜன்னல் வழியாக உள்ளே நுழைந்திடுவதையும் நான் கண்டிப்பாக ஆட்சேபிக்கிறேன்! கபர்தார்! கபர்தார்!" என்று எச்சரிக்கலானார். அப்போது நமது அன்பார்ந்த சர்ச்சில் துரைக்கு எப்படியிருந்திருக்கு மென்று நீங்களே யோசித்துப் பாருங்கள். "போ! போ! உன்னோடு நான் பேசவில்லை!" என்று ரூஸ்வெல்ட்டுடன் அவர் 'டூ' இட்டு விட்டு, ஜன்னல் கதவைக் கோபமாகப் பிறாண்ட ஆரம்பித்து விட்டதில் ஆச்சரியம் என்ன?

* * *

மேற்படி பூனை நாடகத்தைப் பார்த்து விட்டு, இன்று காலையில் வந்த தினசரிப் பத்திரிகைகளைப் பார்த்தால், நமது பேரன்புக்குரிய பிரிட்டிஷ் சாம்ராஜ்ய பிரதம மந்திரி கனம் வின்ஸ்டன் சர்ச்சில் துரையும் ஏறக்குறைய நமது காரியாலயப் பூனையைப் போல்தான் சங்கடத்துக்குள் ஆகியிருக்கிறார் என்று தெரிந்து பரிதபிக்கலானோம். அதிலும் சமீபத்திலேதான் சர்ச்சில் துரைக்கு எழுபது பிராயம் பூர்த்தியானதை முன்னிட்டு உலகத்தின் நாலு பக்கங்களிலிருந்தும் வாழ்த்துச் செய்திகள் வந்து குவிந்தன என்பதையும் எண்ணி, இப்போது நேர்ந்திருக்கும் சங்கடத்தையும் நினைத்தால், ஒரு வேளை 'திருஷ்டி தோஷம்' ஏற்பட்டு விட்டதோ என்று கூட ஐயுற வேண்டியதாயிருக்கிறது.

அவ்விதம் சர்ச்சிலுக்கு இப்போது ஏற்பட்டிருக்கும் சங்கடம் என்னவென்று கேட்டால், அதை ஒருவாறு "வெற்றியின் சங்கடம்" என்று சொல்லலாம்.

ஐந்து வருஷத்துக்கு முன்னால் பிரிட்டனுக்கும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துக்கும் எவ்வளவோ பெரிய மகத்தான சங்கடம் திடீரென்று மலைபோல் வந்தது. அந்தச் சங்கடத்திலிருந்து பிரிட்டனைத் தப்புவித்துக் காப்பாற்றக்கூடிய மனுஷர் சர்ச்சில் ஒருவர்தான் என்று பிரிட்டிஷ் மக்கள் தீர்மானித்து அவரைப் பிரதம மந்திரியாக்கினார்கள். ஏறக்குறைய பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் சர்வாதிகாரி பதவியைச் சர்ச்சில் துரை வகித்து வந்திருக்கிறார். பிரிட்டிஷ் மக்களின் நம்பிக்கையையும் மெய்ப்படுத்தி யிருக்கிறார். மலைபோல் வந்த ஆபத்தை அலைபோல் திரும்பிப் போகும்படி செய்திருக்கிறார்.

யுத்த சங்கடம் இன்னும் முழுதும் தீர்ந்த பாடில்லை. பறக்கும் குண்டுகள் முதலிய ஜெர்மன் பயங்கர ஆயுதங்கள் பாக்கி யிருக்கின்றன. ஜெர்மன் மக்களின் முரட்டுப் பிடிவாதமும் எதிரே நிற்கிறது. "ஜெர்மனியை அடியோடு நசுக்கித் தலை தூக்காமல் அடித்துவிடப் போகிறோம்" என்னும் இராஜதந்திர சூன்ய அசட்டுப் பிரசாரம் வெற்றிக்குக் குறுக்கே மலை போல் நிற்கிறது.

ஆனால் இவற்றையெல்லாம் சர்ச்சில் ஒருவாறு சமாளித்து முடிவிலே யுத்த சங்கடத்திலிருந்து பிரிட்டனைப் பூரணமாய் விடுதலை செய்வார் என்று எதிர்பார்க்கலாம். சர்ச்சிலின் யுத்த தந்திர சாமர்த்தியங்களுடன் கூடிய, அமெரிக்க நாடுகளின் மகத்தான பெரும் பலமும் உதவிக்கு இருக்கிறதல்லவா?

அமெரிக்காவின் சகலமான இயந்திர, தந்திர, இராணுவ பலமும், அதற்கெல்லாம் மேலே சர்வ வல்லமையுள்ள

-உம்மன்

கள்ள மார்க்கெட்டில் ஜவுளி விற்பவர்கள்மீது ஸர் அக்பர்ஹைதரி கடுமையான நடவடிக்கை எடுத்துக் கொள்ளப் போகிறாராம்.

கள்ள மார்க்கெட்

ஸர் அக்பர் ஹைதரி

சிந்து பிரதம மந்திரி ஸ்ரீ ஜின்னாவை அநேக தடவை பேட்டி கண்ட பிறகு கடைசியில், "மந்திரிசபைத் தகராறு தீர்ந்துவிட்டது" என்று ஜின்னா அறிவித்திருக்கிறார்.

நல்ல பிள்ளைக்கு அடையாளம்.

சிந்து பிரதம மந்திரி

ஜனாப் ஜின்னா

# நிகழ்ச்சிச் சித்திரம்

என்னைப் பார்க்க எங்கள் ஊருக்கு வரவும்

நேசக் கட்சித் தலைவர்களான சர்ச்சில் ரூஸ்வெல்ட் ஸ்டாலின் மூவரும் சந்திக்கும் விஷயம் இந்த நிலைமையில் இருக்கிறது.

என்னைப் பார்க்க எங்கள் ஊருக்கு வரவும்

என்னைப் பார்க்க எங்கள் ஊருக்கு வரவும்

ஜெர்மானியரிடமிருந்து விடுவிக்கப்பட்ட ஐரோப்பிய பிரதேசங்களிலெல்லாம் பொதுவுடமைக் கட்சி தோன்றிக் கொண்டிருப்பது சர்ச்சில் போன்றோர்க்குக் கவலையை அளித்து வருகிறது.



# கல்கி

மலர் 4 } தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் { இதழ் 19

# என்ன சேதி?

## மகாமக தர்மம்

அடுத்த 1945-ம் வருஷம் பிப்ரவரி மீ 20உ கும்பகோணத்தில் மகாமக உற்சவம் வருகிறது. முன்னெல்லாம் ஒவ்வொரு மகா மகத்தின் போதும் காலஞ்சென்ற தேப்பெருமா நல்லூர் சிவன் என்னும் பெரியார் சமாராதனை நடத்துவது வழக்கம். கையில் காலணா இல்லாத இந்த மகான் ஊர் ஊராக நடந்து சென்று அரிசியும் பணமும் சேர்த்து லட்சக் கணக்கான ஏழைகளுக்கு அன்னதானம் செய்த மகிமை தஞ்சாவூரில் வெகு பிரசித்தியானது. இரண்டு வருஷத்துக்கு முன்பு அந்த மகான் காலமாகி விட்டபடியால் இந்த வருஷம் மகா மகத்தில் அந்தப் பொறுப்பை யார் வகித்துப் புண்ணியத்தையும் கட்டிக் கொள்ளப் போகிறார்கள் என்று சந்தேகமாயிருந்தது. இப்போது, காலஞ்சென்ற சிவாள் சேவய்யா சாஸ்திரிகளின் பேரர் ஸ்ரீ ஏ.எஸ். கல்யாணசுந்தர சாஸ்திரிகள் (1, கல்யாணராமய்யர் தெரு, கும்பகோணம்) மேற்படி கைங்கரியத்தை மேற்கொண்டிருக்கிறார் என்று அறிந்து மகிழ்கிறோம். இவருடைய சிறந்த கைங்கரியத்துக்குக் கும்பகோணம் ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரிய ஸ்வாமிகளின் பூரண ஆசியும் கிடைத்திருக்கிறது. மகா மகத்தின் போது ஏழைகளுக்கு அன்னதானம் செய்யும் மகத்தான புண்ணியத்தில் பங்குபெற விரும்புகிறவர்கள் தங்களுடைய திரவிய சகாயத்தையோ, உணவுப் பொருள்களையோ மேற்படி கும்பகோணம் ஸ்ரீ ஏ. எஸ். கல்யாணராம சாஸ்திரிகளுக்கு அனுப்பி வைக்கும்படி கோருகிறோம்.

## மன்னர் கோபம்

முன் காலத்திலெல்லாம் மன்னர்களுக்குக் கோபம் வந்தால், "தலையை வாங்கு!" என்று உத்தரவிடுவார்களாம். இந்த நாளில் கோபங் கொண்ட ராஜாக்கள், "இதோ ராஜீநாமா! வாங்கிக்கொள்!" என்கிறார்கள். இந்தியாவிலுள்ள சுதேச சமஸ்தான மன்னர்கள் அடங்கிய "மன்னர் சபை" என்ற ஒரு சபை இருந்து வருகிறது. எதற்காக இருந்து வருகிறது என்று ஒருவருக்கும் தெரியாது. என்னவோ இந்த நாட்டில் உள்ள எத்தனையோ வீண் காரியங்களைப் போல் அதுவும் இருந்து வந்தது. புது டில்லியில் விதவிதமான ஆடை ஆபரணங்களுடன் மன்னர்கள் அலங்காரமாகச் சபை கூடிக் கலைந்து வந்தார்கள். திடீரென்று சென்ற வாரத்தில் இந்தச் சபையின் நிர்வாக சபையார் அனைவரும் ஒரு முகமாக ராஜீநாமா செய்து விட்டார்கள் என்று ஒரு திடுக்கிடும் செய்தி வந்தது. அதற்குக் காரணம் பிரிட்டிஷ் சர்க்காருக்கும் மன்னர்களுக்கும் பழைய உடன்படிக்கைகளைப் பற்றி ஏற்பட்டிருக்கும் தகராறுதான் என்று சிலவகைச் செய்திகள் வெளியாகியிருக்கின்றன. நமக்கென்னமோ, அவ்வளவு இலகுவாக நமது மன்னர்களுக்கும் பிரிட்டிஷ் சர்க்காருக்கும் தகராறு ஏற்பட்டு விடுமென்று தோன்றவில்லை. நமது "கல்கி"யின் அக்டோபர் 22உ இதழில் சுதேச மன்னர்களைப் பற்றி ஒரு கார்ட்டூன் வெளியாகியிருந்ததல்லவா? "அப்படி ஒன்றும் நாங்கள் இல்லை!" என்று தெரிவிப்பதற்காகவே இப்படி அவர்கள் திடீர் ராஜீநாமா செய்திருப்பதாக நாம் கருதுகிறோம்.



# கல்கி
## பொருளடக்கம்



மலர் 4
இதழ் 19

1944 டிசம்பர் 10

தாரண ௵
கார்த்திகை 25












"உங்களுக்குச் சுயராஜ்யம் வேண்டுமா? காலையில் எழுந்ததும் கடக்கட நல்ல காப்பி ஒரு டம்ளர் வேண்டுமா?" என்று கேட்டால், தென்னிந்தியர்களில் முக்கால் வாசிப் பேர், "இரண்டாவது சொன்னதுதான் வேண்டும்!" என்று கொஞ்சம் சங்கோசத்துடனே பதில் சொல்லி விடுவார்கள். காப்பிக்கும் தென்னிந்தியாவுக்கும் அப்பேர்ப்பட்ட நீங்காத் தொடர்பை உண்டு பண்ணிய பெருமையில் ஒரு பெரும் பகுதி ஸ்ரீ வி. எஸ். நாகவுக்குப் போய்ச் சேரும். உயர்தரக் காப்பிக் கொட்டையைப் பக்குவமாக வறுத்துப் பொடித்த 'நாக காப்பித்தூள்' காப்பியைச் சாப்பிட்டவர்கள், சொர்க்கத்துக்குப் போகும் போதுகூட அங்கே நாக காப்பி உண்டா என்று விசாரித்துக் கொண்டுதான் போவார்கள்.

சின்ன வியாபாரமாக ஆரம்பித்து அதைப் பிரமாதமாகப் பெருக்கிப் பெருஞ்செல்வம் சேர்த்த அமெரிக்காவின் பிரசித்த வர்த்தகர்களான ராக்பெல்லர், கார்னிஜி முதலியவர்களுடைய கோஷ்டியைச் சேர்ந்தவர் ஸ்ரீ வி. எஸ். நாக.

சமீபத்தில் அவர் டாக்கி உலகத்தில் பிரவேசித்திருப்பது, "தமிழ் டாக்கிகளுக்கும் விமோசனம் உண்டு" என்னும் ஆசையைப் பலருடைய மனதில் எழுப்பி விருக்கிறது.

அந்த ஆசை நிறைவேறக்கூடிய ஆசைதான் என்பதைப் பாரதியார் ஞாபகார்த்த நிதிக்கு அவர் அளித்திருக்கும் தாராள நன்கொடை ஊர்ஜிதப் படுத்துகிற தல்லவா?

எந்த உணவுப் பொருள்களை நீ அதிகம் விரும்புகிறாயோ

# அவற்றினால் அதிக பலத்தைத் திரட்ட முயற்சிக்கவும்!






விருப்பத்துடன் நீங்கள் சாப்பிடும் உணவுப்பொருள்களை அதிக ஊக்கந் தரக்கூடியவைகளாகச் செய்யுங்கள். நமக்குப் பிரியப்பட்ட சில உணவுப் பொருள்கள் அதிக நன்மை அளிப்பதில்லை என்று உங்களுக்குத் தெரியுமா? அவைகள் பசியைத் தணிக்கின்றன. ஆனால் சிறிது ஊக்கம் மட்டும் அளிக்கின்றன—தேவையான அளவு ஊக்கத்தைக் கொடுப்பதில்லை. இது ஒரு தீங்கிடக்கூடிய போசணைதான். ஆரோக்கியம், சந்தோஷம், திறமை—இவைகளெல்லாம் ஊக்கத்தை ஆதாரமாகக் கொண்டுள்ளன. சாப்பாடு நம் தேவைக்கு வேண்டிய ஊக்கத்தைக் கொடுக்காவிட்டால் ஏற்படும் தீமைகள் பல. எல்லா உணவுப் பொருள்களும் சிறிதளவு ஊக்கத்தை அளிக்கின்றன. ஆனால் தினசரி சாப்பிடும் சில உணவுப்பதார்த்தங்கள் சொல்ப ஊக்கமளிக்கக் கூடியவை. இம்மாதிரியான சாப்பாட்டுக்கு ஊக்கத்தைக் கொடுக்கவேண்டுமானால் அதிக ஊக்கமளிக்கக் கூடிய பதார்த்தங்களைச் சேர்க்கவேண்டும். வைடமின் நிறைந்த டால்டாவினால் சமைப்பது அனுகூலத்தைக் கொடுக்கிறது. இயற்கையளிக்கும் ஊக்கத்தைக்கொடுக்கக்கூடிய சத்துப் பொருள்களை டால்டா கொடுக்கிறது. எல்லா உணவுப்பதார்த்தங்களையும் டால்டாவினால் சமையல் செய்வது நலம்.

ஒவ்வொருவரும் ... பதார்த்தங்கள் ஊக்கமளிக்கக் கூடியவை என்பதை அறிந்திருக்க வேண்டும். டால்டா "குக்புக்" (ஆங்கிலத்தில் மட்டும் எழுதியுள்ளது) உணவுப்பொருள்களின் தாரதம்யத்தைப் பற்றியும், 150 இந்திய ஆகார திட்டங்களைப்பற்றியும் விவரித்திருக்கிறது. 'குக்புக்'கின் ஒரு பிரதி இருக்க வேண்டியவர்கள். Dept. C133 P.O. Box No. 353 Bombay என்ற விலாசத்திற்கு 4 அணா ஸ்டாம்பு அனுப்புங்கள்.




வைடமின் நிறைந்த **டால்டா** ஊக்கமளிக்கிறது.

THE HINDUSTAN VANASPATI MANUFACTURING CO., LTD.

# ஏகோபத்தியமாக

## அங்கீகரிக்கப்பட்டது

## ஸ்வஸ்திக்
## பரிமள காஸ்டராயில்




ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிமிடெட். பம்பாய். 15

451 NAS

சேல்ஸ் டிப்போ: 158-B, பிராட்வே, ஜி. டி., மதராஸ்.



# தென் இந்தியாவில் —
## தேநீர் அருந்தும் நேரம்

ஹைதராபாத்துக்குத் தெற்கேயும், கிழக்கேயும் உள்ள புராதன குடும்பங்களில் நீண்டகாலமாய் இருந்து வரும் பழக்க வழக்கங்கள் மாறுவது கிடையாது. உபயோகம் ஏதாவது உண்டு என்பதாய் இருந்தால் தான் புதிய வழக்கங்கள் அங்கே புக முடியும். வரவர மோட்டார் வண்டிகளில் பிரயாணஞ் செய்வது சகஜமாய்ப் போய்விட்டது. ஜாதி பேதமில்லாமல் ஒன்றாய்ப் பிரயாணஞ் செய்யும் இந்த பஸ்-கள் வந்ததிலிருந்து ஜாதி வேற்றுமைகள் அவ்வளவாகப் பாராட்டப்படுவதில்லை. பிராமணர்கள் பிராமணர் அல்லாதவர்களுக்கு விருந்து உபசாரஞ் செய்வது இப்போது வெகு சகஜம். சிற்றுண்டி ஏதுவும் இல்லாமல் தேநீர் மட்டும் உபசரிக்கும் வழக்கம் ஜாதி வேற்றுமையை ஒழித்துப் பல்வேறு மதத்தினருக்குள் பரஸ்பரம் அன்பைப் பெருக்கி விட்டது.

பெரும்பாலான தென் இந்தியர்கள், சீனியும் பாலும் கலந்த தேநீரைப் பித்தளை டமரா டம்ளர்களில் ரசிக்கிறார்கள். குடிக்கு முன், டமராவிலிருந்து டம்ளருக்கும், டம்ளரிலிருந்து டமராவுக்கும் ஆக மாற்றித் தேநீரை ஆறவைத்துக் கொள்கிறார்கள்.

வடதேசத்தைப் போலவே, இங்கும் புத்தம் புதிய ப்ரூக்பாண்ட் தேயிலையை ஜனங்கள் எல்லோரும் விரும்புகிறார்கள்.

# ப்ரூக் பாண்ட்

"இரு இலையும் ஒரு மொட்டும்"

சுயமாக வெளுக்கும் நுரை என்பது என்ன?

ஸன்லைட் கெமிஸ்டு சொல்லுகிறார் . . .

"அசுத்தமான ஆடைகளிலிருந்து அழுக்குகளை தானாகவே போகக்கூடிய நுரைக்கே சுயமாக வெளுக்கும் நுரை என்று பெயர். அது எப்படி வேலை செய்கிறது! ஸன்லைட் நுரையில் ''பிராணசக்தி'' வாய்ந்த சோப் இருக்கிறது. 'பிராணசக்தி' வாய்ந்த சோபபிற்கு அழுக்கைப் போக்கக்கூடிய சக்தி நிறைந்திருக்கிறது. அது தொட்ட உடன் அழுக்கைப் பற்றிக்கொண்டு தன்னுடன் அழுக்கை எடுத்துவிடுகிறது. ஆகையால் அழுக்கடைந்த ஆடைகளை ஸன்லைட் நுரையினால் கசக்கினால் இந்த 'பிராணசக்தி' யானது உடனே வேலை செய்து நுரையை தண்ணீரில் அலசின உடன் அழுக்குப் போய்விடுகிறது."

# ஸன்லைட் சோப்

## சுயமாக வெளுக்கும் நுரை உடையது




S. 63-33 TM

ஒரு லீவர் பிரதர்ஸ் தயாரிப்பு